

● அவருக்கு எந்தக் காரியத்துக்கும் வேலைக்காரன் துணை இல்லாமல் முடியாது!

● என்ன பீச்சுக்குக் காத்து வாங்க வந்தீங்க போலிருக்கு!
● அதெல்லாம் முன்னே... இப்ப கண்ணுல தண்ணியைப் பாத்துட்டுப் போகலாம்னு வரேன்!



● தண்ணீர்ப் பஞ்சத்திலும் குளிர்ந்த குடிநீர் வடிகட்டிக் கொடுக்கிற சாதனம் சத்துணவுக் கூடங்களுக்கு வழங்கப்படணும்னு எங்க கட்சிக்கூட்டத்திலே தீர்மானம் கொண்டு வரப்போறேன்!



● மார்தட்டிச் சொல்லுவேன்! தோள் வலியில் தமிழனை மிஞ்சியவர்கள் யாருமில்லை!

சத்தியமான வார்த்தை! பம்ப் அடிச்சு பம்ப் அடிச்சு இப்ப தமிழனுக்கு வந்திருக்கிற தோள் வலி சரித்திரம் காணாத தோள் வலி!





● உத்தர கங்கை.. தெலுங்கு கங்கை... அப்புறம் கர்நாடகக் கங்கை!... தமிழ் நாடு கங்கையே கிடையாதான்னு கவலைப்பட வேணும்! நீதான் அருவியா கொட்றியே!

களின் வளர்ச்சியில் அக்கறை காட்ட ஆரம்பித்து விட்டார்கள். மாநிலக் கட்சிகளின் தோற்றமும் வளர்ச்சியும் நம் நாட்டு சரித்திரத்தின் கட்டாயத் தேவையாகிவிட்டது. இதை யாராலும் நிறுத்த முடியாது'

# என்.டி.ஆர். என்ன செய்வார்?

-: விக்டர் அனந்த் :-



விஜயவாடா ஒரு புரட்சியை நடத்திக் காட்டியிருக்கிறது.

எதிர்க் கட்சித் தலைவர்களில் பழம் பெருச்சாளிகள் எல்லாம் கூட்டணி அமைக்க வேண்டும், பலமான மாற்றுக் கட்சி அமைக்க வேண்டும் என்று அடிக்கடி சிந்து பாடிக் கொண்டிருந்த நேரத்தில் என். டி. ஆர். நிறைவேற்றிய காரியம் மாபெரும் வெற்றியாகும்.

அதற்கேற்ப பாரதீய ஜனதா கட்சி மகாநாட்டில் அதன் தலைவர் வாஜ்பாய், அடுத்த இந்தியப் பிரதமர் ஒரு தென்னிந்தியராக இருந்தால் அவருக்கு எங்கள் கட்சி ஆதரவு கொடுக்கும் என்று பிரகடனப்படுத்திவிட்டார். ஆனால் என். டி. ஆரோ, தமது மாநாட்டில் பேசும்போது தெலுங்கு தேசக் கட்சி ஒரு மாநிலக் கட்சியல்ல. இது தேசிய நீரோட்டத்தில் மாநிலத் தேவைகளைப் பூர்த்தி செய்து மத்திய அரசுக்குப் பூரண ஒத்துழைப்பு நல்கும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

## விஜயவாடா ரகசியம்

விஜயவாடா ரகசியக் கூட்டத்தில் 13 எதிர்க் கட்சித் தலைவர்கள், நான்கு முதலமைச்சர்கள் கலந்து கொண்டு ஆறு மணி நேரம் விவாதம் செய்தது ஆச்சரியமான அரசியல் சங்கதிதான். வலதுசாரிக் கட்சிகளும் இடது சாரிக் கட்சிகளும் மனமாச்சரியமின்றி 'தேவுடா'வைக் கௌரவித்தது பாராட்டுதலுக்குரிய அம்சம். ஆயினும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மாநாட்டை ஏன் ரகசியமாக நடத்த வேண்டும்?

## மாநிலக் கட்சிகள்

''இப்போது பொதுமக்களிடம் அரசியல் விழிப்புணர்ச்சி ஏற்பட்டு அவரவர் மாநிலங்களின் வளர்ச்சியில் அக்கறை காட்ட ...

என்று முழங்கப்பட்டுள்ளது.

இந்த முழக்கத்தை நாமும் சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியாது. இந்திரா காங்கிரஸ் ஆட்சியில் ஏற்பட்ட அதிருப்தியால் ஒவ்வொரு மாநிலத்திலும் மாநிலக் கட்சிகள் தோன்றியும் வளர்ந்தும் இருக்கின்றன. அதற்கேற்ப மத்திய மாநில உறவுகளில் மாற்றங்கள் செய்ய சட்டத் திருத்தம் செய்ய வேண்டிய அவசியமும் வந்துவிட்டது.

ரகசிய மகாநாட்டில் திடீர்த் தேர்தல் பற்றிப் பேசப்பட்டுள்ளது. ஆனால் திடீர்த் தேர்தல் வந்தால் இந்த எதிர்க் கட்சிகள் என்ன 'கோரஸ்' பாடப் போகின்றன.?

இந்திரா காந்தி இந்த எதிர்க் கட்சித் தலைவர்கள் ரகசிய மகாநாட்டைக் கண்டு உள்ளூர அச்சப்படுவதில் அர்த்தம் இருக்கிறது. அதனால் இப்போதும் அவர் தென்னிந்தியாவைத் தம் வசப்படுத்த எம். ஜி. ஆர். தயவை நாடலாம். இவர் மூலம் என். டி. ஆர். உறவையும் தேடிக்கொண்டு தேர்தலுக்கு ஆயத்தமாகலாம்.

## என். டி. ஆர். என்ன செய்வார்?

எம். ஜி. ஆருக்கு உள்ள செல்வாக்குக்கு என். டி. ஆர். மாதிரி அவரும் ஒரு திட்டவட்ட முடிவு எடுக்கலாம். ஆனால் இந்த மகாநாட்டில் இந்திராவுக்கு எதிராக ஒரு வார்த்தையும் அவர் பேசவில்லையாம்.

ஆனால் என். டி. ஆரோ, இந்திரா காங்கிரஸுடன் கூட்டோ உறவோ கிடையாது. நாடாளு மன்றத் திடீர்த் தேர்தல் வந்தால் இ. காங்கிரஸுக்குப் பாதி இடத்தை விட்டுக் கொடுக்கும் பேச்சே இல்லை.' என்று கூறியதோடு, மத்திய மாநில உறவில் விரிசல் வந்தால் எம். ஜி. ஆரும் இந்திரா காந்தி உறவை அறுத்துக் கொள்வார் என்று அண்ணனுக்காகப் பேசியிருக்கிறார். அவர் டெல்லியைக் கண்டு அச்சப்படவில்லை.

விஜயவாடாவில் அன்று நடந்த விழாவில் என். டி. ஆர். முதலில் யாருக்கு மாலை போடுவது என்று திகைத்தபடி இருந்தபோது தமிழ்நாட்டு அண்ணனுக்கு என்று ஆர்ப்பாட்டம் செய்தார்கள். திடீர்த் தேர்தல் வந்தால் தமிழ் நாட்டு அண்ணனின் பேச்சைத் தம்பி தட்டுவாரா? அல்லது கூடச் சேர்ந்து கை தட்டுவாரா?





# சலங்கை ஒலி

அவரவர்கள் பார்ட் பார்ட்டாய்க்கமலஹாஸனின் அபிநயத் திறமைகளை மசாலா வாக்கிக் கொள்ளும்போது ஏன் அதைப் பூரணமாய்ப் பயன்படுத்திக் கொள்ளக்கூடாதென்று கே.விஸ்வநாத்துக்குத்தோன்றியிருக்க வேண்டும்.

அதுதான் சலங்கை ஒலி!

கமலைத் தவிர அத்தனையும் தெலுங்கு முகங்கள்.

ஆந்திர வேஷ்டியைக் கட்டிக் கொண்டு சரத் பாபுவும், கமலஹாஸனும் எத்தனைதான் சாமர்த்தியமாய்த் தமிழ் பேசினாலும் டப்பிங் என்பது பட்டவர்த்தனமாகிறது.

டான்ஸுக்குச் சேரப் போகிற இடத்தில் கமல் அபிநயத்தாலேயே விஷயத்தை விளக்குவதும், சமையல் கூடத்தில் அட்டகாசமாய் அபிநயிப்பதும், தமிழ் ரசிகர்களுக்கு மகாப் புதுசு. தெலுங்கு ரசிகர்களுக்கு, 'சுபலேகா' பழசு.

காமிரா ஆட்டோமேட்டிக்காய் ஓடிக்கொண்டிருக்கும்போது சிரிப்பு மாறாமல் பல்லைக் கடித்துக் கொண்டு, 'க்ளிக்காய்டும், சீக்கிரம் வாங்க', 'க்ளிக்காய்டும், சீக்கிரம் வாங்க' என்று ஜெயப்ரதா கமலைக் கூப்பிடும் நயம்.

கடைசி மூச்சுப் பிரிகிறபோது அம்மா செய்கிற சமிக்ஞைக்கு இணங்கி அவள் புடவை முடிச்சை அவிழ்க்க, அவள் பிள்ளைக்கு விட்டுப் போன வியர்வை ஊறிய ரூபாய் நோட்டுக்களைப் பார்த்து கமல் குமுறுகிற வேகம்.

கொட்டும் மழையில் கிணற்றுக்கு நடுவில் ஓடுகிற கம்பியில் பாலன்ஸ் செய்து கமல் தருகிற அந்த டான்ஸ் மூவ்மெண்ட்ஸின் லயம்—

விஸ்வநாத்தின் விசேஷ முத்திரைகள்.

'இதய ஒலியின் ஜதியில் எனது தில்லானா' எஸ். பி. பி., வைரமுத்து, இளையராஜா காம்பினேஷன் அபாரம்.

மற்ற பாடல்கள் கே.வி. மகாதேவனை ஏன் சார் கூப்பிடவில்லை?

எஸ். பி. ஷைலஜா அறிமுகமாகியிருக்கிறார் — ஏன்?

கடைசிக் காட்சிக்கு தியேட்டர் போகிறவர்கள் சொந்த வாகனம் வைத்திருப்பது நலம். ஸ்பெஷல் பஸ்கள் கிளம்பிப் போய் அரை மணி நேரம் கழித்துத்தான் படம் முடியும். அநியாய நீளம்.

சுறுசுறு மசாலாப் படங்கள் என்றால், 'டிஷ்யூம் டிஷ்யூம்' நான்கு, டான்ஸ் மூன்று கற்பழிப்பு இரண்டு, ஜோக்கு ஒன்று — என்று ஃபார்முலா. விஸ்வநாத்தும் ஒரு பார்முலா வைத்திருக்கிறார்.

ஒரு திறமையான கலைஞன். அவனை நேசிக்கும் (பூஜிக்கும்) ஒரு உண்மையான ரசிகை. கலைஞனால் முன்னுக்கு வரமுடியாமல் போகும். ரசிகையின் குழந்தை வளர்ந்து பெரிதாகும். அந்தக் கலைஞனை குருவாக்கி அவனுக்கு வாரிசாய்த் தன் குழந்தையைக் காண ரசிகையின் மனம் துடிக்கும். தான் இன்னாரென்று முதலில் சொல்லாமல் அந்தக் கலைக்காக ஒரு பெரிய விழா எடுத்து அதில் அந்தக் கலைஞனைக் கௌரவித்துரசிகை கண்ணீர் சிந்துவாள். — அவனின் வித்தைக்கான வாரிசைக் கண்டு கலைஞன் மனம் நெகிழ்ந்து போட்! அன்று சங்கராபரணம், இன்று சலங்கை ஒலி.

கலை சாகாது. நிஜம். படம்?

-ஜெய மன்மதன்

---



முன்னாள் இங்கிலாந்து பிரதமர் சர் வின்ஸ்டன் சர்ச்சில் பிடித்த ஒரு சுருட்டு லண்டனில் ஏலம் விடப்பட்டது. இந்தச் சுருட்டு ரூ. 4800க்கு ஏலம் போனது.

8 அங்குல நீளமுள்ள இந்தச் சுருட்டு நுனியில் மட்டும் சிறிது தீயில் எரிந்து இருந்தது.

கண்ணாடிப் பெட்டி ஒன்றில் வைக்கப்பட்ட இந்தச் சுருட்டு, இங்கிலாந்து ராயல் ஏர் ஃபோர்ஸ் அறக் கட்டளைக்கு 1952ல் நன்கொடையாக அளிக்கப்பட்டதாகும்.

—ஏ. நிர்ச்சலா தேவி

# வாசகர் பேட்டி போட்டி முடிவு



(காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறன் அவர்களுக்கான ஏராளமான கேள்விகளை வாசக அன்பர்கள் அனுப்பியிருந்தனர். பின்வரும் பத்து கேள்விகளும் தலா ரூ 25 பரிசு பெறுகின்றன. அவற்றுக்குப் பதில் தந்துள்ள திரு நெடுமாறன் அவற்றுள் திரு கி ஆனந்தன் (இளநிலைப் பொறியாளர் (தொ. பே.) நாகப்பட்டினம்) எழுதியுள்ள கேள்வியைச் சிறப்பானதெனத் தேர்ந்தெடுத்துள்ளார். இவர் ரூ 50/- சிறப்புப் பரிசு பெறுகிறார். -ஆசிரியர்)

**கேள்வி:** (ஆர். சுப்பராவ், 94-ஏ, கீழ வீதி, திருக்கோவலூர்-605757)

அன்னை இந்திராவின் ஆட்சிக் காலத்திலேயே இந்தியாவின் ஒருமைப்பாடு ஆட்டம் கண்டு விட்டதே. அவருக்குப் பின் நாட்டின் கதி என்ன?

**பதில்:** தனக்குக் கிடைத்த தேசியத் தலைமையைத் தன்னுடைய பாரபட்சமான போக்கினாலும், குறுகிய கண்ணோட்டத்தினாலும் திருமதி இந்திரா சிதைத்துவிட்டார். பஞ்சாப், அஸ்ஸாம் போன்ற பிரச்னைகளைத் தேசிய கண்ணோட்டத்துடன் அணுகிப் பரிகாரம் காணமுயற்சி செய்யாமல், குறுகிய கட்சிக் கண்ணோட்டத்தில் அணுகி அவற்றை விசுவரூபம் எடுக்கச் செய்துவிட்டார். இதன் விளைவாக தேசிய ஒருமைப்பாடு எத்தகைய ஆபத்துக்கு உள்ளாகி யிருக்கிறது என்பதைப் பற்றிய கவலை திருமதி இந்திராவுக்கு இல்லை. பஞ்சாபிலும் அஸ்ஸாமிலும் ரத்தம் ஆறாக ஓடி, அப்பாவி மக்கள் படுகொலை செய்யப்பட்டு, அம்மாநிலங்களில் கொந்தளிப்பு ஏற்பட்டுள்ளதைப் பற்றிய கவலை அவருக்கில்லை. மாறாக அம்மாநிலங்களில் தனது கட்சி ஆட்சி பீடத்திற்கு வந்துவிட்டது என மகிழ்ச்சி கொள்ளும் ஒருவரால் தேசிய ஒருமைப்பாட்டை எப்படிப் பாதுகாக்க முடியும்?

**கேள்வி:** (திருமதி சந்திரா, 25/2, பாம்பே பூனரால் — சிவாஜி நகர்)

காமராஜ் காலத்தில் காங்கிரசுக்கும் தற்போதைய இந்திரா அம்மையார் காங்கிரசுக்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமை என்ன?

**பதில்:** காமராஜ் காலத்து காங்கிரசில் காந்தியத்தின் சாயல் படிந்திருந்தது. ஸ்தாபனத்திற்கு மதிப்பிருந்தது. உண்மையாக உழைக்கும் தொண்டர்களுக்கு ஏற்ற மதிக்கப்பட்டது. இன்றைய இந்திரா காங்கிரசில் பதவி வெறியின் சாயல் படிந்திருக்கிறது. தனி நபர் வழிபாடு மிகுந்துள்ளது. துதி பாடிகளுக்கே இடம்.

**கேள்வி:** (கி. ஆனந்தன், இளநிலை பொறியாளர், (தொ. பே.) நாகப்பட்டினம்)

இன்னமும் காமராஜ் தொண்டர்கள் பிரிந்திருப்பது அவசியமா? அவர்களை ஓர் அணியில் திரட்டுவதற்கு உங்கள் சுயநலம் இடம் தரவில்லையா?

**பதில்:** காமராஜ் தொண்டர்கள் ஓரணியில் இணைய வேண்டும் என்ற குரலை 1979 அக்டோபர் 2ம் நாள் எங்கள் கட்சி பிறந்தபோதே நாங்கள் ஒலித்தோம். இன்னமும் தொடர்ந்து அதற்காகப் பாடுபட்டு வருகிறோம். பலர் எங்களுடன் இணைந்து வருகிறார்கள். ஆனால் காமராஜ் தொண்டர்கள் எதற்காக ஒன்றுபட வேண்டும் என்பதில் தெளிவும், திட்டவட்டமான கருத்தும் இருக்க வேண்டும். பதவிக்காக

என்று சொன்னால் அது சரியாக இருக்காது. தமிழ் நாட்டில் தலைவர் காமராஜ் உயிருடன் இருந்தபோது டெல்லியின் குறுக்கீடோ, தலையீடோ இல்லாதபடி கட்சியை நடத்தினார். தமிழ் நாட்டு மக்களின் விருப்பு வெறுப்புகள், தேவைகள் முதலியவற்றைப் புரிந்து கொண்டு அவற்றுக்காகப் பாடுபடும் அமைப்பாகத் தமிழ் நாட்டில் காங்கிரசை நடத்தினார். அதே வேளையில் தேசிய நீரோட்டத்திலிருந்து எள்ளளவும் விலகவில்லை. ஆனால் இப்போது தமிழகத்தில் உள்ள பல்வேறு தேசியக் கட்சிகளும் டில்லியில் உள்ள தங்கள் தலைமைப் பீடத்தின் தலையீடு இல்லாமல் எதுவும் செய்ய முடியவில்லை. இலங்கைத் தமிழர் பிரச்னையானாலும், காவிரி நதி நீர்ப் பிரச்னையானாலும் தமிழர்களின் நலன்களைப் பாதிக்கிற எந்தப் பிரச்னையானாலும் தங்கள் உண்மையான கருத்தை வெளியிட முடியாமல் தத்தளிக்கிற காட்சியை நாம் பார்க்கிறோம். இது கூடாது. தலைவர் காமராஜ் அவர்களுக்கு இருந்த துணிவோடும், செயல் திறனோடும் நாமும் பாடுபட முடிவு செய்தாலன்றி காமராஜ் தொண்டர்கள் ஒன்றுபட வேண்டும் என்ற வெற்றுக் கோஷத்தால் எந்தப் பயனும் இல்லை.

கேள்வி: (எல். சந்திரசேகரன், 55, வடகாசி அம்மன் கோயில் 2வது தெரு, சங்கரன்கோயில்.)

ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள் என்று காமராஜ் கூறியது உங்களுக்கும், குமரி அனந்தனுக்கும் பொருந்துமா?

பதில்: காமராஜர் என்ற வற்றாத குளத்தில் பூத்த இரு மலர்களாக நாங்கள் விளங்குகிறோம்.

கேள்வி: (கு. கணேசன், 60, பெருமாள் கோயில் தெரு, சைதை, சென்னை-15)

பிரதமர் இந்திரா காந்தியே நேரடியாக அழைப்பு விடுத்தால் மீண்டும் இந்திரா காங்கிரஸில் இணைவீர்களா?

பதில்: கட்சி அமைப்புகளிடமோ, தொண்டர்களிடமோ நம்பிக்கை இல்லாமல் தன்னை மட்டுமே நம்பி கட்சியை நடத்துகிற முறை, ஜனநாயகத்தில் நம்பிக்கை இல்லாமல், அதைத் துச்சமாக மதிக்கிற தன்மை, தமிழகத்தைத் தொடர்ந்து புறக்கணிக்கிற போக்கு, பதவி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு ஏற்படுத்திக்கொள்கிற சந்தர்ப்பவாத கூட்டுகள் இவற்றைக் கண்டு மனம் நொந்தே இந்திரா காங்கிரஸிலிருந்து நாங்கள் வெளியேறினோம். இந்தக் குணம்சங்களிலிருந்து திருமதி இந்திரா காந்தி இன்னமும் விடுபடவில்லை. இந்நிலையில் இந்திரா காங்கிரஸில் மீண்டும் சேருவது என்கிற பேச்சுக்கு இடமில்லை. பகுகுணா வீட்டிற்கு திருமதி இந்திரா காந்தி தமது புதல்வர்கள், மருமகள்கள், பேரன் பேத்திகள் ஆகியோருடன் சென்று காங்கிரஸில் சேருமாறு அழைத்து, பிரிந்த குடும்பம் இணைகிறது என்று பெரிய அளவில் தேசமெங்கும் விளம்பரம் செய்து காங்கிரஸில் தனக்குஅடுத்தபடியாகத்தலைமைப்பொதுச் செயலாளர் என்ற பதவியை உருவாக்கி பகுகுணாவுக்கு அளித்து அவர் உதவியுடன் தேர்தலில் வெற்றி பெற்ற பிறகு கருவேப்பிலை போல் பகுகுணாவைப் பயன்படுத்தித் தூக்கி எறிந்த திருமதி இந்திராவையா இன்னும் நம்பச் சொல்கிறீர்கள்!

கேள்வி: (துயாறு எஸ், வாசுதேவன், 41, அம்மையப்பன் தெரு, சென்னை-14)

கட்சித் தாவல் தடுப்பு மசோதாவை ஆதரிக்கும் முகத்தான் அல்லது எதிர்க்கு முகத்தான் உங்களுடைய கருத்து என்னவாக இருக்கும்?

பதில்: ஒரு கட்சியின் சார்பில் நின்று அக்கட்சித் தொண்டர்களின் உழைப்பினாலும் அக்கட்சியை ஆதரிக்கும் மக்களின் ஆதரவினாலும் வெற்றி பெற்றவர்கள் வேறு கட்சிக்குத் தாவுவதைப் போன்ற துரோகச் செயல் வேறில்லை. இத்தகைய கட்சித் தாவலைத் தடுக்கச் சட்டம் வரவேண்டியது அவசியம். இத்தகைய சட்டத்தை நாடாளு மன்றம்தான் இயற்ற முடியும். பல்வேறு மாநிலங்களிலும் கட்சி தாவி வந்திருப்பவர்களின்உதவியால் ஆட்சியைப் பிடித்திருக்கும் இந்திரா காங்கிரஸ் இத்தகைய சட்டத்தைக் கொண்டு வருமா என்பது சந்தேகமே.

கேள்வி: (வே. குருமூர்த்தி, 19-2, மாருதி சீட்சிதர் தெரு, சிதம்பரம்-608001)

காங்கிரசை வழிநடத்திடச் சிறந்த தலைவர்களைக் காமராஜ் உருவாக்கவில்லை என்ற குற்றச்சாட்டு பற்றித் தங்கள் பதில் என்ன?

சாந்தி—
அட்டை
வண்ணப்
படம்:
உத்ரா—



# டெபாசிட்தாரர்களுக்கு V.I.P. BRIEF CASE அன்பளிப்பு

## நம்பிக்கையின் ஒளி விளக்கு 'பாலாஜி'

# 22%

டெபாசிட்தாரர்களுக்கு வழங்கும் கூடுதல் வட்டி



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

6 மாதங்கள் வரை-16%

3 மாதங்கள் வரை-15%

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

91, உஸ்மான் ரோடு, (சிவா விஷ்ணு கோயில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017. போன் : 447186

| | | |
|---|---|---|
| பெங்களூர் | : | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3, முதல் மாடி, ஜி.ஏ. கனல் ரோடு, தஞ்சாவூர், போன் : 1626 |
| திருவண்ணாமலை | : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601, போன் : 483 |
| பட்டுக்கோட்டை | : | 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை, போன் : 453 |

CHARI

பதில்: இந்தக் குற்றச்சாட்டை நான் ஏற்க வில்லை. தமிழ் நாட்டில் காங்கிரசை வழி நடத்திச் செல்லச் சிறந்த தொண்டர்களை, குறிப்பாக இளைஞர்களைத் தலைவர் காம ராஜ் உருவாக்கிவிட்டுத்தான் சென்றிருக் கிறார். அவர்கள் ஒன்றுபட்டுப் பணி யாற்றும் வாய்ப்பு உருவாகி விடுமானால் நீங்கள் எதிர்பார்ப்பது நடக்கும்.

கேள்வி: (வி. கஸ்தூரிரங்கன், சி. 127, ஸ்பிக் நகர், தூத்துக்குடி-628005)
நீதி — தர்மம் என்றீர்களே! திருச் செந்தூர் தேர்தலில் மக்கள் வழங்கிய தீர்ப்பு அவைகளை நிலைநாட்டியதா அல்லது நிலைகுலைத்ததா? நீதியினின்று பிறழா த உங்கள் நேர்மையான விளக்கம் என்ன?

பதில்: திருச்செந்தூர்த் தேர்தலின் முடிவை அரசியல் ரீதியாக ஏற்க வேண்டியதும், பரிசீலனை செய்ய வேண்டியதும் அனைத் துக் கட்சிகளின் கடமையாகும். ஆனால் வெற்றி பெற்ற கட்சியான அ. தி. மு.க. வைச் சேர்ந்த திரு ஆர். எம். வீரப்பன் திருச்செந்தூர் தேர்தல் முடிவை கோவில் அதிகாரி கொலையுடன் சம்பந்தப்படுத்தி ஓர் அறிக்கை வெளியிட்டார், கோயில் அதிகாரி கொலையானார் என்பதையோ, தற்கொலை செய்து கொண்டார் என் பதையோ நேர்மையான நீதி விசாரணை யின் மூலம்தான் முடிவு செய்ய வேண் டுமே யன்றி, தேர்தல் முடிவை வைத்து முடிவு செய்யக் கூடாது. ஆனால் தேர்தல் முடிவோடு கொலையைச் சம்பந்தப்படுத்தி உண்மையைத் திரித்துக் கூற ஓர் அமைச்சர் முன்வரும்போது அவர் வாதத்தின் அடிப் படையிலேயே அவருக்குப் பதில் கூறும் உரிமை எதிர்க் கட்சிகளுக்கு உண்டு. அமைச்சர் திரு வீரப்பன் வாதப்படி திருச்செந்தூரில் அ.தி.மு. க.வுக்கு வாக் களித்த மக்கள் கோவில் அதிகாரி கொலை ஆகவில்லை எனத் தீர்ப்பளித்து விட் டார்கள் என்பதேயாகும். அ.தி.மு.க. வுக்கு 40 சதவிகித மக்கள் வாக்களித்துள் ளார்கள். கோவில் அதிகாரி கொலை செய் யப்பட்டார் எனக் குற்றம் சாட்டிய தி. மு. க. ஜனநாயகப் பாதுகாப்பு அணியில் உள்ள 9 கட்சிகள், ஜனதா கட்சி ஆகிய கட்சிகளின் ··வேட்பாளர்கள் 60 சதவிகித—வாக்குகளைப் பெற்றிருக் கிறார்கள். அப்படியானால் அமைச்சரின் கூற்றுப்படி 60 சதவித மக்கள் இது கொலை என்று தீர்ப்பளித்திருக்கிறார்கள். 40 சதவீத மக்களே தற்கொலை என்று தீர்ப்பளித்திருக்கிறார்கள்.

கேள்வி: (ப. மூர்த்தி, 83, பாஷ்யம்நகர், ஸ்ரீராமபுரம், பெங்களூர்-560021)
பேசுவது தேசியம் — நாடுவது தமிழக நலன் இந்த இரட்டை வேட முறைதான் உங்களுக்கு நிலையான புகழைத் தரவில்லை என்பது சரியா?

பதில்: தேசியமும், தமிழக நலனும் ஒன் றுக்கொன்று எதிரானது என்று நான் கருதவில்லை. தமிழக நலனுக்காகக் குரல் கொடுப்பது தேசிய விரோதம் என்று சொன்னால் அது தவறு. இந்தியாவின் ஒருமைப்பாடு, மாநிலங்களின் சீரான வளர்ச்சியில்தான் அடங்கியிருக்கிறது. அதை உணராதவர்கள் உண்மையான தேசியவாதியாக இருக்க முடியாது. ஆங்கிலேய ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிய காலத்தில் பல்வேறு மாநில மக்களும் ஒன்றுபட்டு நின்று போராடி ஒற் றுமையாக எண்ணற்றதியாகங்கள் செய்து நாடு முழுவதற்கும் சேர்த்துச் சுதந்திரம் பெற்றோம். சுதந்திரம் பெற்ற பிறகு பல்வேறு மாநில மக்களையும் இரண்டாந் தரக் குடிமக்களாகக் கருதும் போக்கு டில்லியில் ஏற்பட்டிருப்பதின் விளைவாகத் தான் மாநிலங்களின் உரிமைக் குரலை ஓங்கி ஒலிக்க வேண்டிய அவசியம் ஏற் பட்டது. எனவே தேசியம் என்ற பெய ரைச் சொல்லித் தமிழகத்தின் குரலை ஒடுக்க முயல்வது தேசிய ஒருமைப்பாட்டுக்கு உத வாது.

கேள்வி: (ஏ. வி. சாயிகுமாரி, 16, சுப்பிர மணியசாமி கோயில் தெரு, கொசப்- பேட்டை, வேலூர்-632001)
தேசியத்தை வளர்த்த காமராஜ் பெய ரில் கட்சியை நடத்தும் தாங்கள் பிரிவினை யைக் கேட்கும் ஈழத் தமிழர்களின் பிரி வினைக்காகப் போராடுவது ஏன்? நம் தமிழ் நாட்டவர் பிரிவினையைக் கேட்டால் ஆத ரிப்பீர்களா?

பதில்: வங்க தேச மக்கள் பாகிஸ்தானின் கொடுமையை எதிர்த்துப் போராடிய போது அவர்களுக்கு இந்தியா உதவியது. இஸ்ரேலின் பிடியிலிருந்து விடுபடத் துடிக்கும் பாலஸ்தீன அரேபியர்களுக்கு இந்தியா இப்போது உதவுகிறது. பாகிஸ் தானின் எதேச்சாதிகாரத்திலிருந்து பட் டாணிய மக்கள் விடுபட்டு பக்தூனிஸ்தான் அடைய வேண்டும் என்று போராடும் எல்லை காந்தி கான் அப்துல் கபார் கானுக்கு இந்தியா ஆதரவு கொடுக்கிறது. இவையெல்லாம் பிரிவினைப் போராட் டங்கள் இல்லையா? ஈழத் தமிழர்கள் கேட்டது மட்டும் பிரிவினைப் போராட் டமா? கிழக்கு வங்க மக்களின் விடுதலைப் போராட்டத்திற்கு உதவ இந்திய இரா ணுவம் சென்றபோது இந்தியாவிலும் ஒரு வங்கம், மேற்கு வங்கம் இருக்கிறது. அந்த வங்கமும் கிழக்கு வங்கம் போல் சுதந்திரம் கேட்டால் என்ன செய்வது என்று யாரும் சந்தேகிக்கவில்லை. ஈழ நாட்டுத் தமிழர்களின் போராட்டத்தை ஆதரித்தால் மட்டும் நாளைக்குத் தமிழ் நாட்டிலும் இத்தகைய எண்ணம் வளர்ந் தால் என்ன செய்வதென்ற வேண்டாத கேள்வி எழுகிறது.

போட்டிக்கான கருத்து, தொகுப்பு:
பிரியன்
புகைப்படம்: சுபா

# உண்மை

உலகில் அநேக பொருள்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பொருளும் மாறுதல் அடைந்தும், அழிந்துகொண்டும் இருக்கிறது. பரம்பொருள் ஒன்றுதான் ஒரு சமயமும் மாறாமல், அழியாமல், ஒரே நிலையாய், உண்மையாய் இருக்கக் கூடியது. ஆகவே உண்மை, சத்தியம் என்றாலே பரம்பொருள்தான்.

''சத்யம் வத'' உண்மையைப் பேசு என்று நம்முடைய அறநூல்கள் கூறுகின்றன. உண்மையே பேசவேண்டும். ஆனால் அப்படிப் பேசுவதினால், பிறருக்குத் துன்பம் வருவதாக இருந்தால் ஒன்றுமே பேசாமல் மௌனமாக இருப்பது நல்லது. சில சமயம் சமுதாய நலனைக் கருதி நாம் உண்மை பேசும்போது சில தனி மனிதர்களுக்கு அதனால் துன்பம் ஏற்படலாம், மனக்கஷ்டம் உண்டாகலாம். அச்சமயம் சிலருக்கு மனத்துயர் உண்டானாலும் பரவாயில்லை என்று சமுதாய நலனைக் கருதி உண்மை பேசவும் தர்மத்தை எடுத்துக் கூறவும் நமக்குத் தைரியம் இருக்கவேண்டும்.

வாழ்க்கையில் எவ்வளவு துன்பம் வந்தாலும் அவைகளை யெல்லாம் பொறுத்துக்கொண்டு, தன் வாழ்நாள் முழுவதும் உண்மையைப் பேசி வந்ததின் வரலாறுதான் ஸ்ரீ ஹரிச்சந்திரனின் கதை.

ஸ்ரீ ராமர் இரண்டு சொல் பேசுவதில்லை. ஒரே வார்த்தைதான் பேசுவார் என்று இராமாயணம் கூறுகிறது. அதாவது ஸ்ரீ ராமன் சத்தியசந்தன்.

ஸ்ரீ கிருஷ்ணர் பல லீலைகள் செய்தார். கடைசியில் பகவத் கீதையை உபதேசம் செய்தார். அதில் என்னை பூஜிப்பவர்கள் தியானிப்பவர்கள், என்னை நினைப்பவர்கள் என்னையே அடைகிறார்கள்; சத்தியமாகச் சொல்கிறேன் என்கிறார். இவ்விடத்தில் சத்தியமான பரம்பொருளே சத்தியம் பற்றிப் பேசுகிறது!

சத்தியமேவ ஜயதே'' என்பது நம்முடைய தேசத்தின் அதிகாரச் சின்னத்தின் கீழ் காணப்படும் வழிகாட்டும் வாசகம். வாய்மையே வெல்லும் என்பர்.

காந்திஜி அரிச்சந்திர நாடகத்தைப் பார்த்துச் சத்தியத்தின் மேன்மையை உணர்ந்து, உண்மையே கடவுள் என்று கருதித் தன் வாழ்நாள் முழுவதும் உண்மைக்கு மாறுதல் இல்லாமல் வாழ்ந்து காட்டினார்.

சத்தியத்தையே பேசி வருபவனின் வார்த்தை வீண் போகாது. அவன் சொல்வது நிறைவேறும். அவனும் தர்மத்தை மீறி எதுவும் கூற மாட்டான். இவர்களையே தீர்க்கதரிசிகள் என்கிறோம்.

''தொண்டை நாட்டார் பொய்யுரைக்க மாட்டார்'' என்பது தமிழ் பழமொழி. பொய்யா மொழி என்று வேதங்களையும் தேவாரங்களையும் கூறுவார்கள்.

மனித வாழ்வு உண்மையானதல்ல. கனவு போல் பொய்யானது என்று வேதாந்த நூல்கள் கூறுகின்றன. இதையே சித்தர்களும் ''காயமே இது பொய்யடா, காற்றடைத்த பையடா'' என்றும் கூறுகிறார்கள். நிலையற்ற, உண்மையற்ற இந்த உடலை உடைய நாம் சத்திய வாழ்க்கை நடத்தி நிலையான, மெய்ப் பொருளை அடைய முயற்சி செய்ய வேண்டும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்




நான் தோற்றுப் போனது கிடக்கட்டும்! அவங்க நிலகுப்புற கவுந்தது ரொம்ப ஜோர்!
தேர்தல் வெற்றி
தேசிய மகாநாடு கட்சி


துப்பாக்கி மட்டும் போதாது. பீரங்கியைக் காட்டி மிரட்டினால் தான் பத்திரிகைக்காரங்க ஒழுங்கா நடந்துக்குவாங்க!
பத்திரிகை கட்டுப்பாடு புதிய சட்டம்


குருவாயூரப்பா சரணம்!..
நிலக்கல் சர்ச்சுக்கும் சரணம்!..
..ஆமென்!



கல்கி

1983 ஜூன் 19
ருத்ரோத்காரி ஆனி 5
மலர் : 41 இதழ் : 47



# இரட்டை ஆபத்து!

முன்பெல்லாம் குடும்பக்கட்டுப்பாடு பிரசாரகர்கள் ஓர்ஊருக்குப் போனால் அங்குள்ளவர்கள் இவர்களைக் கேலி செய்வார்கள்; கல்லெறிந்து அடித்து விரட்டிய காலமும் உண்டு. ஆனால் இன்று மக்கள் இந்த ஊழியர்களையும் அதிகாரிகளையும் வரவேற்று அவர்கள் கூறுவதைக் கேட்டுக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள். இதுவே ஒரு மகத்தான சமுதாயப் புரட்சிதான். அதைச் சாதித்துள்ள தமிழகக் குடும்ப நலத் துறை பாராட்டுக்குரியது.

'இரண்டுக்குப் பின் எப்போதும் வேண்டாம்' என்பது போன்ற புளித்துப்போன வாசகங்களையே திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டிராமல் வேலையில்லாத் திண்டாட்டம், குடியிருப்புப் பிரச்னை, ஏழைமை போன்றவை ஜனத்தொகை உயர்வால்தான் கட்டுப்படுத்த முடியாமல் பெருகுகின்றன என்பதைச் சுட்டிக்காட்டி, 'இன்றே இப்படி இருந்தால் நாளை என்னவாகும் யோசித்துப் பாருங்கள் என்று மக்களைச் சிந்திக்க வைக்கலாம். இதற்கான போஸ்டர்கள், திரைப்படங்கள் போன்ற பிரசார சாதனங்களைத் தயாரிக்கலாம். கு. க. அறுவைச் சிகிச்சை செய்து கொள்பவருக்கு ஊக்கமளிக்க ஒரு குறிப்பிட்ட தொகையை அளிப்பதுடன் (அது மறுநாளே செலவாகிவிடும்) வேலை வாய்ப்பில், பிரமோஷனில் சலுகை என்பது போன்ற நிரந்தரப் பயன் தரும் வெகுமதியை அளிக்கலாம். முஸ்லிம்களிடையே இப்பிரசாரம் வலுவடையப் பிரசாரம் செய்யப் போகும் குழுவில் ஓரிரு முஸ்லிம் பெண்மணிகள் இடம்பெற வேண்டும். மேலும் முஸ்லிம் மதத் தலைவர்களின் ஆதரவை இந்த இயக்கத்துக்குப் பெற்றாக வேண்டும். இல்லையெனில் இந்தச் சமுதாயத்தினரிடையே செய்யப்படும் பிரசாரமெல்லாம் விழலுக்கிறைத்த நீராகிவிடும்.

கு. க. பிரசாரத்திலும் சாதனையிலும் சில ஆண்டுகளுக்குத் தமிழகமே இந்தியாவில் முன்னணி மாநிலமாக இருந்தது. ஆனால் இப்போது வேறு ஓரிரு மாநிலங்கள் இந்த முதன்மை ஸ்தானத்துக்குப் போட்டியிடுகின்றன. இதனைத் தோல்வி என்று கருதத் தேவையில்லை. முந்தைய ஆண்டுகளில் அடைந்த அபார வெற்றி காரணமாக இங்கு கு. க. அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள வேண்டியவர்களின் எண்ணிக்கையே கணிசமாகக் குறைந்து போயிருக்கக் கூடிய நிலையில் இலக்குகளை மென்மேலும் அதிகரித்துக் கொண்டே போவது பகுத்தறிவுக்குப் பொருத்தமானதல்ல. மோசடிகளுக்கே வழி வகுக்கும்.

குடும்ப நலத் துறை ஊழியர்களிடையே பிரசாரகர்கள் வேறு; ஆள் பிடித்து வந்து இலக்கை எய்த வேண்டிய பொறுப்புள்ளவர்கள் வேறு என்று பிரித்து விடுவது நற்பயன் தராது என்பதோடு அவர்களிடையே மனக் கசப்பையும் வளர்க்கும். ஆனால் கு. க. செய்து கொள்ளும் மாநில அரசு ஊழியருக்கு ஒரு சலுகை, மத்திய அரசு ஊழியருக்குக் கூடுதல் சலுகை என இன்றுள்ள அநீதி மாறியே ஆகவேண்டும்.

குடும்பக் கட்டுப்பாடு பிரசாரத்தில் உள்ள ஆபத்துக்களை உணர்ந்து முதலில் எச்சரித்தவர் ராஜாஜி. ''ஓர் இன்பத்தை அனுபவித்துவிட்டு அதன் பின் விளைவான பொறுப்புக்களைத் தவிர்த்து விடும் சமுதாயம் நிச்சயம் சீரழிந்துபோகும்'' என்றார். அறிவாளிகளின் எண்ணிக்கை குறையும்; ஒழுக்கக் கேடு மிகும்; நோய்கள் அதிகரிக்கும். அவர் தீர்க்கதரிசி என்பதை மேல் நாடுகள் பல இன்று உணர்ந்து வருகின்றன. அங்கே சமுதாயச் சீரழிவு இருந்தாலும் கூடவே பொருளாதார முன்னேற்றமாவது இருக்கிறது. இங்கோ, பொருளாதார முன்னேற்றத்துக்குத் தேவையான சீரிய கொள்கைகளைக் கடைப்பிடிக்காததோடு சமுதாயச் சீரழிவுக்கும் அடிக்கல் நாட்டிக் கொண்டிருக்கிறோம். இரட்டிப்பு ஆபத்து!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

## அத்தியாயம் 10

அனாடமி எனப்படும் உடலமைப்பியலைக் கற்றுப் பத்மா அதிக மதிப்பெண்களுடன் தேர்ச்சி பெற்றாள்.

முதல் நாளன்று சடலங்களைப் பார்த்ததும் மயங்கி விழுந்த சம்பவம் நினைவுக்கு வரும் போது அவளுக்கு வேடிக்கையாகவும் வெட்கமாகவும் இருக்கும். அந்தச் சமயங்களில் ராம்குமாருக்கு அவள் மனம் இன்னொருமுறை மானசீகமாக நன்றி தெரிவிக்கும். அன்று அவன் வந்து தைரியமளித்ததினால்தானே அடுத்த நாள் துணிச்சலுடன் அனாடமி தியேட்டருக்குப் போனாள்!

பிரகாசமான வெய்யில் ஜொலிம்பிய ஒரு



விடியற்காலையில் மூன்றாவது வருடப் படிப்பு ஆரம்பித்தது. அன்று மாணவர்கள் வார்டுக்குள் அனுமதிக்கப்பட்டனர்.

பத்மா இன்ஜெக்ஷன் ஓ.பி.க்குச் சென்றாள். டெல்டாய்டு தசையில், லாட்டரல் திசையில் உத்தேசமாக 40 டிகிரியில் ஊசியைப் பாய்ச்ச வேண்டும் என்று ஊசி போடக் கற்றுக் கொடுத்தார்கள்.

அந்த ஊசி போடும் ஓ.பி.யில் இரண்டு வயதான நர்சுகள் இருந்தனர். ஒருத்தி மலையாளி. தினமும் குறைந்தது நானூறு பேர்களுக்காவது இயந்திர வேகத்தில் ஊசி குத்திவிடுவது அவர்கள் வேலை. மாணவர்களின்பிரவேசத்தால் அவர்களுடைய வேலைப் பளு குறைந்ததால் மாணவர்களைக் கண்டதும் அந்த நர்சுகளுக்குக் கொண்டாட்டம்.

அழுக்கு மூண்டாப் பனியனும், பரட்டைத் தலையுமாக, கிராமத்து ஆசாமி போல் 'கியூ'வில் வந்த ஒருவனுக்கு முதல் முறையாக சுப்பையா ஊசி குத்தினான். ஊசி நேராக அவனுடைய எலும்பில் பாய, அவன், ''நிறுத்துய்யா, நிறுத்துய்யா'' என்று அலறினான்.



ஊசியைப் பிடுங்கிவிட்டு விலகி ஓடினான். ''டாக்டராம், டாக்டர். எங்கேயாவது போய் மாட்டுக்குப் போடேன்யா'' என்று கையைத் தேய்த்துக்கொண்டுசொன்னான்.

அதைப் பார்த்ததும் பத்மாவுக்கு ஓடி விடலாம் போல இருந்தது. ராம்குமார் டெய்சியுடன் சிரித்துப் பேசிக் கொண்டு வராந்தாவின் கோடியில் விரைந்து வந்து கொண்டிருந்ததைப் பார்த்தாள்.

ராம் யாரிடம் பேசினாலும் முன்பெல்லாம் பத்மா பொறாமையால் வெந்து போவாள். இப்போது அவன் தன்னை விரும்புகிறான் என்பது உறுதியாகி விட்ட பிறகு அந்தப் பொறாமையுணர்வு அவளிடம் தலையெடுப்பதில்லை. அவன் எங்கே போனாலும், யாரிடம் பேசினாலும் அவன் என்னுடையவன் என்ற நம்பிக்கை அவளுள் வேரூன்றி விட்டது.

ராம் உள்ளே வந்ததும் அவளிடம் புதிய தெம்பு பிறந்தது. மலையாளி நர்ஸ் பத்மாவைப் பார்த்து, ''எந்த இயர் டாக்டர் நீங்க?'' என்று கேட்டாள்.

ராம் புன்னகை செய்தான். பத்மாவுக்கு அந்த நர்ஸ் கேட்டது ஒருவித புல்லரிப்பை ஏற்படுத்தியது. மூன்றாவது ஆண்டிலேயே இவள் என்னை டாக்டராக்கி விட்டாளே.

இஞ்செக்ஷன் சிரிஞ்சைப் பத்மா கையில் பிடித்தபோது முதலில் அவளுக்குச் சந்தோஷமாகவும் கொஞ்சம் பயமாகவும் பெருமையாகவும் இருந்தது. பத்துப் பேருக்கு ஊசி போட்ட பிறகு பயமெல்லாம் பறந்து விட்டது. அப்பா! நான் நோயாளிகளுக்கு ஊசி போடறதைப் பார்க்க நீங்க இல்லாமப் போயிட்டீங்களே.

வைகறை ஐந்து மணிக்கு டெய்சியின் அலாரம் கிணு கிணுக்க ஆரம்பிப்பதற்கு முன்பாகவே பத்மா எழுந்து விடுவாள். பாத்ரூமில் தண்ணீர் வரும் வரை படிப்பாள். முதல் நபராகக் குளியலை முடித்துவிட்டு அவசர அவசரமாகப் புடவை அணிந்து சிரத்தையுடன் விழிகளுக்குக் கரு மை

நீட்டிச்கண்டு விரலில் எஞ்சியிருந்த மையைக் கூந்தலில் தேய்த்து விட்டு வார்டுக்குக் கிளம்பினாள்.

பகல் பொழுதில் வார்டிலும், வகுப்பறைகளிலும், ஆய்வுக் கூடங்களிலும், விழுதுகளைத் தோரணமாகத் தொங்கவிட்டிருக்கும் ஆலமர நிழலிலும் மாணவர் கூட்டத்துக்கிடையே ராமைத் தரிசித்தபடி, அவன் மிகவும் பக்கத்தில் இருக்கிறான் என்ற பிரக்ஞையுடன் குதூகலமாக வாழ்ந்தாள்.

மாலையில் சோர்வுடனும் மனத் தொய்வுடனும் விடுதிக்குத் திரும்பினாள். நாளைக் காலை மறுபடியும் வார்டுக்குச் செல்லும் வரை ராமைப் பார்க்க முடியாது. அவனைப் பிரிந்திருக்க வேண்டும் என்று நினைத்து இதயத்தை ஸ்கால்பெலால் கீறியதைப் போன்ற வேதனையை அனுபவித்தாள். மாலையில் இருண்ட விடுதியறைக்குள் வந்து விளக்கிற்காக சுவிட்சைப் போட்ட நேரங்களில் ஜ"ராம் கண்ட மாதிரி கூட உணர்வாள்.

மழை பெய்த இரவு வேளைகளில் ராமின் நினைவு அவள் மனத்தில் ரகசிய கதகதப்பை ஏற்படுத்தியது. 'ராம்குமார், ராம்குமார்' என்று 'ஹஸ்கி'யாகப் பக்கத்துப் படுக்கையில் புரளும் டெய்சிக்குக் கேட்காதபடி உச்சரித்து ஒரு 'த்ரில்'லை அனுபவித்தாள்.

குளித்தபோது மூன்று முறை முகத்துக்குச் சோப் தேய்த்துக் கழுவினாள். நீர் சொரிந்த ஷவரை விட்டு விலகிக் குளியலறைக் கண்ணாடிக்குள் முகத்தை ரசித்தாள். ராம் என் முகத்தைப் பற்றி என்ன நினைக்கிறான்? நான் நிஜமாகவே அழகாக இருக்கிறேனா? அவனுக்கு ஏற்றவள்தானா?

சசச... பல் வரிசை முத்துக் கோத்தது போல நீல வெண்மையுடன் பளிச்சிடத்தான் செய்கிறது. லேசாகக் கூன் போடுவதாக டெய்சி சொன்னாள். திருத்திக் கொண்டேன். இன்னும் சதை போட வேண்டும் என்றாள். வெட்கமில்லாமல் ஆறு இட்லி சாப்பிடுகிறேன். காதல் என்னைப் போன்ற சாதாரணப் பெண்ணைக் கூட அழகியாக்கி விடுமோ! எப்படி இருந்தால் என்ன? அழகு, பார்க்கிறவர் கண்ணில்தானே இருக்கிறது.

ராம் – பத்மாவின் இதயங்கள் ஒன்றையொன்று நாடுகிற விஷயம் கல்லூரிக்குள் படிப்படியாகப் பரவியது. புருவங்கள் ஆச்சரியத்தால் எழும்பின. மாணவிகள், டெய்சி நீங்கலாக, அநேகமாக எல்லோருமே பத்மாவைப் பொறாமைக் கண்களுடன் பார்த்தனர்.

நிர்மலா, "சும்மா இவதான்டி ராம் ராம்னு உயிரை விடறா. அவன் ஸைட் லேர்ந்து ஒரு ரியாக்ஷனும் கிடையாது" என்றாள்.

"ரியாக்ஷன் இல்லாமலா நானூறு ரூபா செலவு பண்ணி பெய்லி அண்ட் லவ் வாங்கிக் குடுத்திருக்கிறான்" என்றாள் மரகத மீனாட்சி.

சாரதா, "அவன் பெரிய மல்டி மில்லியனர். இவகிட்ட என்ன இருக்கு. நானும் பார்க்கறேன். ஆறு மாசமா ஒரே ப்ளூ ஸாரியைக் கட்டியடிக்கறா" என்றாள்.

"ராம் கொடைக்கானல்ல இங்லிஷ் மீடியத்தில படிச்சவர். அமெரிக்கன் ஆக்ஸெண்டோட எவ்வளவு ஃப்ளுவன்ட்டா இங்கிலீஷ் பேசறார். இவ எங்கேயோ குப்பைத் தொட்டிப் பள்ளிக்கூடத்திலே படிச்சவ. அவனோடு ஈடு குடுத்துப் பேச முடியுமா?"

ஒரு நாள் முதன் முறையாக ராமும் பத்மாவும் படிக்கட்டில் ஒன்றாக அமர்ந்து கடந்து சென்ற மாணவ, மாணவிகளையும் பேராசிரியர்களையும் பற்றிக் கவலைப்படாமல், மருந்துகளின் ஆக்ஷன், கவுண்ட்டர் ஆக்ஷன் பற்றிப் படித்தனர்.

ராமிடமிருந்து பரவிய ஆப்டர் ஷேவ் லோஷன் மணம் பத்மாவை எங்கேயோ இழுத்துச் சென்றது.

மறுநாள் ஞாயிற்றுக் கிழமை.

நண்பகல் உணவுக்குப் பிறகு பத்மா அறைக்குள் படுத்துக் கொண்டிருந்தாள். ஆண்கள் விடுதிப் பக்கம் கிட்டார் சப்தமும் சிரிப்பும் கைதட்டலும் கும்மாளமுமாக இருந்தது. டெய்சி அறையில் இல்லை.

தோட்டக்காரக் கிழவர் கன்னியப்பன், மடிக்கப்பட்ட மருந்துச் சீட்டு போன்ற காகிதத்தைக் காக்கிச் சட்டையின் பைக்குள்ளிருந்து எடுத்து ஜன்னல் வழியாக நீட்டினார்.

பத்மா அதை வாங்கிப் படித்தாள். ராம் ஆங்கிலத்தில் எழுதியிருந்தான்.

'மாலையில் ஒரு திருமண ரிஸப்ஷனில் கலந்துகொள்ள ஆபட்ஸ்பரி செல்கிறேன். நீயும் என்னுடன் வரவேண்டும் என்று விரும்பு

---

மதுரையில் நடந்த மாநாடு ஒன்றில் கலந்துகொள்ள இருந்த மேயர் வரத் தாமதம் ஏற்பட்டது. நேரத்தைச் சமாளிக்க சிலேடைப் புலவர் சிக்கந்தர், கூடியுள்ளோர் விருப்பமறிந்து பாடிக்கொண்டிருக்கையில் மேயர் பட்டுராசன் மேடைக்கு வந்து விட்டார். 'புலவரிடம் நானும் கேட்க வேண்டும். இன்னுமொரு பாடல் பாடுங்கள்' என்றார் மேயர்.

'இதுவரை நான் பாடியது நேயர் விருப்பம். இனி நான் பாட இருப்பது 'மேயர் விருப்பம்' என்று புலவர் கூறியதை அனைவரும் ரசித்தனர்.

—எஸ். சலீம் ராஜா



# சம்பந்தி அம்மாள் மகிழ்ந்தாள்!

"பிள்ளை வீட்டுக்கார அம்மாள் நாம கொடுக்க இருக்கிற சீர் வரிசைகளை எல்லாம் பார்த்தாங்க. கப்பல் கப்பலா, அடுக்கடுக்காக சீர் வரிசை லிஸ்டைப் படிச்சாங்க. அவங்க முகத்தையே கவனிச்சிட்டு இருந்தேன். ஊஹூம்! ஒரு மாறுதல் இல்லை...பயந்து போயிட்டேன், திருப்தியே இருக்காதா அந்த அம்மாளுக்குன்னு..."

"அப்புறம் அப்புறம்?"

"லிஸ்டிலே கடைசிப் பக்கத்துக்கு வந்துட்டாங்க...ஊஹூம்! முகத்திலே மாறுதலே இல்லை. திடீர்னு அந்த அம்மா முகத்திலே சந்தோஷம் வந்தது... பேஷ், பேஷ்னு சொன்னாங்க. பக்கத்திலே இருக்கிற சம்பந்திக்காரர் கிட்டே லிஸ்டைக் காம்பிச்சு ஏதையோ குறிப்பா சொன்னாங்க...அவர் முகத்திலேயும் மகிழ்ச்சி ஏற்பட்டது."

"அது என்னடி அப்படி பிரமாத சீர்...? சம்பந்திக்காரங்களுக்குச் சந்தோஷத்தைத் தர விஷயம்?"

"சம்பந்தி அம்மா சொன்னாங்க... நீங்க கொஞ்சம் விபரமா அந்த ஸ்ரீராம் டிரஸ்ட் டெபாஸிட் விஷயத்தைக் கூறுங்கனு சொன்னாங்க....எங்க வீட்டுக்காரர் உடனே விவரிக்க ஆரம்பிச்சுட்டார்."

"சொல்லு விபரமா...எனக்கும் கேட்க ஆர்வமா இருக்கு. என் பெண் கல்யாணத்துக்கும் அதே சீர்வரிசையைச் செய்யலாம் பாரு..."

"எங்க வீட்டுக்காரர் ஒரு புது யோசனையை மத்த சீர் வரிசைக்குச் சிகரமா செய்தார். அது என்னனுகேளு....நம்ம ஸ்ரீராம் டிரஸ்டிலே என் மாப்பிள்ளை பேரிலே ஒரு பிக்சட் டெபாஸிட் செய்துள்ளார். ஒரு 1000 ரூபாதான்."

"இந்த ஆயிரம் ரூபாய்க்காகவா அந்த சம்பந்திக்காரங்க சந்தோஷப் பட்டாங்க? எவ்வளவோ கம்பெனிகளிலே டெபாசிட்டுக்குக் கூடுதல் வட்டி தராங்க ஸ்ரீராம் டிரஸ்ட் டெபாஸிட்டுலே அப்படி என்ன சிறப்பு ஆதாயம்?"

"அவங்க இலக்கிய ரசனையுள்ள குடும்பம். அந்த பிக்ஸட் டெபாசிட்டுலே கிடைக்கிற பலனைப் பார்த்துச் சந்தோஷப்பட்டாங்க".

"என்ன பலன்? அதைச் சொல்லு" "ரூ. 1000/-த்தை ஸ்ரீராம் டிரஸ்ட் பிக்சட் டெபாஸிட்லே போட்டால் 7 வருஷத்திலே ரூ. 2000/-ஆகத் திரும்பி வருகிறது. அதோட 7 வருஷத்துக்கு 84 அமுதசுரபி மாத இதழ் தபாலிலே கிடைக்கிறது."

"அப்புறம்?"

"7 வருஷத்துக்கு அமுதசுரபி தீபாவளி மலரும் கிடைக்கிறது. அது தவிர புதுசா கல்யாணம் ஆகிக் குடும்பம் நடத்துகிறவங்களுக்குப் பூஜை அறையில் வைக்க 6 தெய்வப் படங்கள் குடுக்கிறாங்க, ஸ்ரீராம் டிரஸ்ட்காரங்க. பிரபல தெய்வச் சித்திரங்கள் 'சில்பி' வரைந்தது... போதுமா?"

"அடடே...!பிரமாத கல்யாணப் பரிசு! நிரந்தரக் கல்யாணப் பரிசு! மன மகிழ்ச்சியான கல்யாணப் பரிசு! பேஷ்!உங்க சம்பந்தி அம்மா சந்தோஷப் படறதிலே ஆச்சரியம் என்ன? நானும் அதே மாதிரி ஒரு சீரை என் பெண் கல்யாணத்துக்கும் ஏற்பாடு செய்துடறேன்...வெளி நாட்டுலே வரன் நிச்சயமாகும் போலிருக்கே?"

"வெளிநாடுன்னா இரண்டாயிரம் ரூபாய் டெபாசிட் செய்யணும். இரண்டாயிரம் ரூபா நாலாயிரமாகக் கிடைக்கும்... அயல் நாட்டுக்கே அமுதசுரபியும் தீபாவளி மலரும் அனுப்பி வைப்பாங்க."

"நானும் அப்படியே செய்யறேன் பார்!"

மேற்கொண்டு விபரங்களுக்குத்
தொடர்பு கொள்க:



**ஸ்ரீராம்**
**டிரஸ்ட்**

அமுதசுரபி வெளியீட்டாளர்கள்
அலுவலகம்:123, அங்கப்ப நாயக்கன் தெரு.
சென்னை-600 001

ADWAVE ST AS 2364

## இண்டல் ஜோக்ஸ்

''டார்வினைப் பற்றி பாக்கியராஜ் படமெடுத்தால் என்ன டைட்டில் வைப்பார்?''

''தெரியாது!''

''டார்வின்... டார்வின்... டார்வின்!''

—எம். பாஸ்கர்

சோமு: ''பாரதிராஜா குழந்தைகளை வைத்துப் படம் எடுத்தால் என்ன பெயர் வைப்பார்?''

ராமு: ''அழுகைகள் ஓய்வதில்லை!''

—வி. ஆர். நாகராஜன்



கிறேன். ஆட்சேபணை இல்லையென்றால் தயவு செய்து ஐந்தரைக்கு பஸ் ஸ்டாப்பில் நில்.'

இதுவரை ராம் என்னை வெளியே வரும்படி கூப்பிட்டதில்லை. முதல் முறையாக அழைப்பு விடுத்திருக்கிறான். அவனுடன் ஜோடியாகச் செல்ல, அதுவும் ஆபட்ஸ்பரியில் நடக்கும் பெரிய வீட்டுத் திருமண ரிஸப்ஷனுக்குச் செல்ல எனக்கு என்ன தகுதி இருக்கிறது?

ஷீலாவைப் போல நான் மாடர்னாக பான்ட் ஜீன்ஸ், மாக்ஸி மிடியெல்லாம் அணிவதில்லை. அயல் நாட்டு யார்ட்லி பவுடரை உடம்பில் கவிழ்த்துக் கொள்வதில்லை. இன்டிமேட் ஸென்டின் தூறலில் என்னை நனைத்துக் கொள்ளுவதில்லை. உதட்டுக்கும் பூசிக் கொள்வதில்லை. என்னை எதற்காகத் துணைக்கு அழைக்கிறான்?

இருக்கும் ஒரே ஒரு கனகாம்பர நைலக்கம் வெள்ளைச் சோளியும், 'ரோஜா-வேட் ரிஸப்ஷன் டே' நிகழ்ச்சிக்கு அணிந்ததால் கசங்கிப் போயிருக்கிறது. இந்த நேரம் பார்த்து முன்னறிவிப்பில்லாமல் கூப்பிடுகிறானே.

கன்னியப்பன் பதிலுக்காக அறைக்கு வெளியே காத்திருந்தார். உடம்புக்கு முடியவில்லை என்று தப்பித்துக் கொள்ளலாமா? அவனுடன் செல்ல நான் விரும்பவில்லை என்று தவறாக நினைத்து விட்டால்? அவனோடு சேர்ந்து வெளியில் செல்ல நான் எவ்வளவு துடிக்கிறேன் என்பது எவக்குத்தான் தெரியும். இப்போது என்ன செய்வது? படபடப்பு, அசௌகரிய உணர்வு, திகைப்பு ஆகியவற்றால் சில நிமிடங்கள் தயங்கினாள். பிறகு கதவைத் திறந்து தலையை வெளியே நீட்டி, ''தாத்தா எனக்கு ஜுரம்'' என்றாள்.

''பதில் கேட்டாரு.''

''பதில் எழுதி வாங்கிட்டு வரச் சொன்னாரா?''

''ஆமா. அதுக்குத்தான் நின்னுக்கிட்டிருக்கேன்''

''ஜுரமாப் படுத்திருக்கேன்னு சொல்லுங்க.''

கன்னியப்பன் சென்று விட்டார். பத்மாவின் மனம் மிகவும் கிளர்ச்சியடைந்து புத்தக வரிகளில் படிய மறுத்தது. குப்பென்று வியர்த்து, பின் பக்கம் ஜாக்கெட்டுக்குள் வழிந்தது.

ராம் தவறாக நினைத்து விட்டால் என்ன செய்வது? சிறுகச் சிறுகக் கஷ்டப்பட்டு வளர்த்த நட்பை ஒரே நொடியில் அழித்து விடுவதா?

உங்களுக்கு ஜோடியாக நடந்து ஆபட்ஸ்பரி ரிஸப்ஷனுக்குச் செல்லும் அளவுக்கு என்னிடம் ஆடை அணிகலன் இல்லையே, ராம். நகை இல்லாவிட்டால் கூடப் பரவாயில்லை. பட்டுப் புடவை கூடக் கட்டிக் கொள்ளாமல் வேலைக்காரி போலவா வருவது? காலையிலேயே சொல்லியிருந்தால் டெய்ஸியிடம் இரவலாவது வாங்கி வைத்திருப்பேனே.

இரவல் வாங்கி அலங்கரித்துக் கொள்ளுவதில் என்ன பெருமை இருக்கிறது? இல்லாததை இருப்பது போல் பிறர் முன் காட்டிக் கொள்வது ஏமாற்றுவதற்குச் சமமில்லையா?

யாரைப் பற்றியும் கவலைப்படாத மாதிரி எளிமையாகச் சென்றால் என்ன? பிறர் என்ன நினைத்தால் எனக்கென்ன? மற்றவர்களுக்காகவா நான் வாழ்கிறேன்? ராம் என்ன நினைக்கிறான் என்பதுதானே எனக்கு முக்கியம். நான் ஒன்றும் பணக்காரி போல அவனிடம் நடிக்கவில்லையே. என்னுடைய ஏழ்மையை நான் சொல்லித்தான் அவன் தெரிந்து கொள்ள வேண்டுமா? பணத்துக்கும் செயற்கை அழகுக்கும் மதிப்பளிப்பவனாக இருந்திருந்தால் என்னிடம் பழகியே இருக்க மாட்டானே. மென்மையான அவன் உணர்வுகளைக் காயப்படுத்துவது நியாயமாகுமா? உண்மைக் காரணத்தை நானே அவனிடம் சொல்லி மன்னிப்புக் கேட்டுவிட வேண்டியதுதான்.

கால் மணி நேரம் பத்மாவின் மனம் எண்ணங்களுடன் மல் யுத்தம் செய்தது. எழுந்து ஜன்னல் வழியே பார்த்தாள். மறுபடியும் கன்னியப்பன் விடுதிக் காம்பவுண்டுக்குள் நுழைந்து வந்து கொண்டிருந்தார்.

அவர் கையில் கடிதம் எதுவும் இருக்கிற மாதிரித் தெரியவில்லை. 'என் அறைக்குத்தான் வருகிறாரா? ராமிடமிருந்து மறுபடியும் ஏதாவது செய்தி கொண்டு வருகிறாரோ? அவன் கோபமாக ஏதாவது சொல்லி அனுப்பியிருப்பானோ?

(தொடரும்)



# அண்ணாவின் டயரிகள்

முகுந்தன்

**ஹிட்லர் தன் கைப்பட எழுதியது மாதிரி போலி டயரிகளை உருவாக்கி, பலரை முட்டாளடித்த விவகாரம் பத்திரிகைகளில் சந்தி சிரிக்கிறது. இதே போல் தமிழ்நாட்டிலும் நடக்குமானால்....**

டயரி விவகாரத்தில் அநேகமாக எல்லா தமிழ்ப் பத்திரிகைகளுமே அக்கறை எடுத்துக்கொள்ளத் தொடங்கின.

'அண்ணாவின் டயரிகள்' பிரசுரமாவதற்கு முன்னோட்டமாக 'மக்கள் குரல்' பத்திரிகையில் டி. ஆர். ஆர். வழக்கமான பாராக்கள், பத்தாக்கள், நெட்டைத் தலைப்புகள், குட்டிக் குறிப்புகளுடன் ஐந்து நீண்ட கட்டுரைகள் எழுதினார். டி. ஐ. ஏ. ஆர். ஒய்... என்ற எழுத்துக்கள் எப்படி ஆரம்பித்தன; Diary கும் Dairy க்கும் இடையேயுள்ள முக்கியமான முப்பத்தாறு வித்தியாசங்கள் என்னென்ன; ஆதி மனிதன் ஆதாம், ஆப்பிள் மரத்து இலைகளில் நகத்தால் கீறி, ஏவாளைச் சந்தித்தது பற்றி எழுதியதே முதல் டயரி என்ற புதுத் தகவல்; உலக வரலாற்றில் டயரி எழுதிய பிரமுகர்கள் யார், யார்; எழுதாதவர்கள் யார் யார் — இப்படிப் பலசுவையான விஷயங்களை மொச்சைக் கொட்டை எழுத்துக்களால் கட்டுரைகளில் திணித்திருந்தார் டி. ஆர். ஆர்.

'தினமணி'யில் 'டயரி எழுதாதவன்' என்ற புனைப்பெயரில் 'சோஷலிஸ நாடுகளில் டயரி எழுதும் பழக்கம்' பற்றி, திங்கள், வியாழன், வெள்ளிக் கிழமைகளில் நீண்ட கட்டுரைகளை எழுதி வாசகர்களின் அறிவுப் பசிக்குத் தீனி போட்டார் ஏ. என். எஸ்.

குமுதம், 'படுக்கையில் பதினெட்டு வருடங்கள்' என்ற தலைப்பில் சில நூற்றாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த காதல் மன்னன் டான் ஜுவான் எழுதிய டயரியின் சுவையான பகுதிகளை 'ஜெ'யின் படங்களுடன் தொடராக வெளியிட ஆரம்பித்தது.

'ஆனந்தவிகடன்' டயரி தயாரிக்கும் தொழிலைப் பற்றிக் கலர்ப் படங்களுடன் ஒரு கவர் ஸ்டோரி வெளியிட்டது. டயரிகளின் முதுகுகளை ஒட்டி ஒட்டியே வயிறும் முதுகும் ஒட்டிப்போன தொழிலாளர்களின் படங்களுடன் பிரசுரித்தது. டயரி தயாரிப்பில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு டயரி எழுதக்கூட நேரமில்லாமல் இருப்பது குறித்தும், அவர்களுக்கு இலவசமாக டயரி தரப்படாதது பற்றியும் குறைப்பட்டுக் கொண்டு நிறைய ஏக்கப் பெருமூச்சுகளை அக்கட்டுரையில் வெளியிட்டிருந்தது.

டயரி எழுதும் பழக்கம் பற்றி ராஜாஜி எந்தெந்தச் சந்தர்ப்பத்தில் என்னென்ன கூறியிருக்கிறார் என்ற குறிப்புக்களைத் திரட்டி வாரா வாரம் பிரசுரிக்கத் தொடங்கியது 'கல்கி'.

'குங்குமம்' இதழில் 'நெஞ்சுக்கு நீதி' நிறுத்தப்பட்டது. அதற்குப் பதிலாக, கலைஞரின் 'மிசா' டயரி' வெளியாயிற்று.

மணியன் எழுதும் டயரியை 'நான் நலந்தான், நீங்கள்?' என்ற தலைப்பில் 'ஆசிரியரின் டயரி குறிப்புக்கள் அவருடையதே' என்ற எச்சரிக்கை கலந்த முன்னுரையுடன் வாரந்தோறும் வெளியிடத் தொடங்கியது, 'இதயம் பேசுகிறது'. அப்பத்திரிகையில் வெளியாகும் மற்ற அம்சங்களை விட இந்தப் பகுதியே சுவாரசியமாக இருப்பதாக ஏராளமான வாசகர்கள் கருத்துத் தெரிவிக்கவே,

டயரி குறிப்புகளை வெளியிடுவதற்காக வென்றே 'பெர்ஸனல் டயரி' என்ற தலைப்பில் புதிய பத்திரிகை ஒன்றை ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் ஒரு விழாவுடன் ஆரம்பித்து வைத்தார் மணியன்.

சாவி தம் 'பழங் கணக்கு' கட்டுரைத் தொடரின் . அமைப்பை டயரி குறிப்புப் பாணிக்கு மாற்றி மூன்று வாரம் எழுதினார். பின்னர் அந்தப் பகுதியையே சட்டென்று நிறுத்தினார்.

'நுரைப் பூக்கள் நூற்றுக் கணக்கில் ஆலோலப் பண் பாடி அணி முரசு கொட்டும்' இந்தக் காலப் பறவை ஞால வெற்றிக்காக நடத்திக் கொண்டிருக்கும் எழுத்து வேள்வியில், காலில் சிக்கிய சூலிகைகளும் கவனத்தில் தப்பிய கணிப்புகளும் மாட வீதியில் அசைந்தாடி வரும் மணித் தேராக, நாட்குறிப்புகள் இந்த இதழ் முதல் தொடக்கம் செய்கின்றன' என்ற குறிப்புடன் வலம்புரி ஜான் 'தாய்' இதழில் புதுப் பகுதி ஆரம்பித்தார். ''அடுத்த இதழில் புரட்சித் தலைவர் பொன்மனச் செம்மல் பொற் கரங்களால் தீட்டும் 'நான் ஏன் டயரி எழுதுகிறேன்' தொடர் ஆரம்பம். அத்துடன் செல்வி ஜெயலலிதாவின் நெஞ்சை அள்ளும் நெடுங்காவியம் 'டயரியிலே ஒரு மூன்' தொடங்குகிறது'' என்ற அறிவிப்பும் அதே இதழில் வெளியாயிற்று.

இவற்றுக்கிடையில் 'துக்ளக்' நெல்லை ஜெபமணியை விட்டு 'அண்ணா டயரி எழுதக் கூட வக்கில்லாதவர்' என்ற கருத்தில் ஒரு கட்டுரை எழுதச் செய்து பிரசுரித்தது: அதற்கு அடுத்த இதழில் 'துர்வாசர்', 'படுக்கையில் பதினெட்டு வருடங்கள்' தொடரையும், மணியனின் 'நான் நலந்தான்....' கட்டுரையில் டிம்பக்டூ பேரழகிகளின் பிரம்மாண்டமான பின்புறங்களை ரசனையுடன் வர்ணித்திருந்ததையும் கண்டனம் செய்து, காரசாரமாக ஒரு கட்டுரை எழுதினார்.

பொங்கி எழுந்தார் நக்கீரன். 'அண்டர் வேர் கூட ஒழுங்காகப் போடத் தெரியாத அரை வேக்காட்டு முண்டமே!' என்று ஆரம்பித்து, ஆறரைப் பக்கங்களுக்குத் துர்வாசரைத் துவைத்தெடுத்து அலசிப் பிழிந்து விட்டு, டீன் ஏஜ் பருவத்தில் துர்வாசர் எழுதியதாகக் கூறப்படும் ஒரு டயரியிலிருந்து சில கொச்சை பச்சையான வார்த்தைகளை அப்படியே எடுத்துக் காட்டி, ''வாசகர்களே! மன்னியுங்கள் என்னை!'' என்று கன்னத்திலும் போட்டுக் கொண்டார்...

மன்னியுங்கள், கற்பனை ஓட ஓட, அண்ணா வின் மீது அடங்காத கோபம்தான் வருகிறது. இப்படி யெல்லாம் தமிழ் வாசகர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தச் சந்தர்ப்பம் அளிக்காமல் — டயரி ஏதும் எழுதி வைக்காமல் — டயரி எழுதும் பழக்கமே வைத்துக் கொள்ளாமல் — ஏமாற்றி விட்டாரே அண்ணா என்ற கோபம்தான்!

## அடாவடி ஜோக்ஸ்

வீட்டுக்காரர்: டேய், மரியாதையா நீ திருடினதை யெல்லாம் கீழே வைத்து விட்டுப் போ!

திருடன்: என்ன சாமி, பகல் கொள்ளையா இருக்கிறதே! இதில் பாதி பக்கத்துத் தெருவில் திருடினதாச்சே!

—கே. கணேஷ்







''வாழ்க்கையிலே எனக்குப் பிடிக்காதது கசாப்புக் கடை வைக்கிறதும் மிலிடரி ஓட்டல் நடத்துகிறதும்தான்.''

''ஏன் அப்படி? அவ்வளவு தீவிர சைவமாக்கும்?''

''ஊஹூம்.... யாருமே என்னைப் பார்த்து 'மூளை இருக்கா'ன்னு ஒரு கேள்வி கேட்டுடக் கூடாது. அவ்வளவுதான்!''

—பெ. கலாசாமி

# வெப்பத்தால் நீங்கள் வலுவிழந்து வாடுகையில்...



உங்களுக்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-Dயின் புதிய பெயர்.

உட்கொள்ளுங்கள் **க்ளுகோன்-டி** ®

**அதிக சக்தி—உங்களுக்குத்தேவையான போது.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்க செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்து விடும் உங்கள் சக்தி யெல்லாம். அப்போது தான் உங்களுக்குத் தேவை புத்துணர்ச்சி தரும் குளுமையான க்ளுகோன்-டி. அது உங்களுக்கு அதிக சக்தி தருகிறது-உங்களுக்குத் தேவையான போது.

.30 ஆண்டுகட்கும் மேலாக இலட்சக் கணக்கானோர்க்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-டி யின் புதிய பெயர் தான் க்ளுகோன்-டி. எந்த பானத்திலும் அதைக் கலந்து அருந்தலாம்; பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளுகோன்-டி; மேற்கொண்டு தத்தம்பணிகளில் அவர்கள் ஈடுபட-விளையாட்டிலும், வேலையிலும். க்ளுகோன்-டி— உங்களுக்கு வழக்கமான அதே பச்சை உறையிலே கிடைக்கிறது.






வைட்டமின்-டி மற்றும் கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் கொண்டு வளமூட்டிய அசல் க்ளுகோஸ் பவுடர்—**க்ளாக்ஸோ** அளிக்கிறது.

HTB-GLL-6737 TL

# கிழம் இனி வராது!

''கிணிங்...கிணிங்!'' — ராகவன் தன் சைக்கிள் மணியை விடாமல் ஒலித்தான். முதல் முறை அடித்தவுடனே ஓடிவந்து திறக்கும் சீதாவை அன்று காணவில்லை.

சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவிட்டுப் படி ஏறிக் கதவைத் தட்டியவுடன் தான் அவள் சமையலறையிலிருந்து வெளிப்பட்டாள். வாசல் வராந்தாவில் ஒரு ஜோடிக் காலணி கிடந்தது. பழையது. பல முறை சரிபார்க்கப்பட்டுத் தோல்வியுற்ற போர் வீரன் போல் பரிதாபமாகக் காட்சியளித்தது.

''யார்?'' என்று ஜாடையாக விசாரித்தான் ராகவன்.

''உங்கள் மாமாதான்'' என்று தோள் பட்டையில் ஒரு நொடி நொடித்துவிட்டு உள்ளே போனாள் சீதா.

ராகவனின் முகத்தில் அதிருப்தி படர்ந்தது.

இந்தக் கிழவருக்கு வேறு வேலை இல்லை. திடீர் திடீரென்று கிராமத்திலிருந்து புறப்பட்டு வந்து விடுவார். வரும்போது பத்து முருங்கக்காய், இல்லை இரண்டு புடலங்காயுடன் வருவார். சரியாக இரண்டு வாரம் ''காம்ப்''. பழைய காலத்து சரீரம். நன்றாக வஞ்சனை இல்லாமல் சாப்பிட்டுப் பழகியவர். பத்து நாட்களுக்கு அதிகப்படி செலவு நூறு ரூபாய்க்குக் குறையாது.

போகும்போது அவர் எப்போது புறப்பட்டுப் போனாலும் — அவர் கையில் பணம் இருக்காது. ''ஒரு இருபது கொடேன்... போய் அனுப்புகிறேன்'' என்பார். இதுவரை அனுப்பியது இல்லை.

அவர் அவனுடைய சொந்த மாமா கூட இல்லை. இருந்தாலும் அவரை வெட்டிப் பேச அவனுக்குத் தயக்கம். ஒரு சமயம் இவன் வீட்டில் மிகுந்த சிரமம். அடுத்தவேளை சாப்பாட்டிற்கு என்ன செய்வது என்று தெரியாமல் தவித்த சமயம். அப்போது இந்த மாமா தான் உதவி செய்தார் என்ற

## அன்னம்



அவன் அம்மா அடிக்கடி சொல்லி இருக்கிறாள். வேறு கிட்டத்து உறவு ஏதும் அவருக்குக் கிடையாது.

ஆனால் சீதாவுக்கு — அவர் வந்தாலே எரிச்சல். ''அதைச் செய்... இதைச் செய்'' என்று அதட்டும்போது பற்றிக்கொண்டு வரும். எப்படிப் பண்ணிப் போட்டாலும் குற்றம் கண்டு பிடிப்பார். ''ஒரு கல் உப்பு குறைவாக இருந்தால் ரசம் அமிர்தமாய் இருந்திருக்கும்!'' என்பார். ''இன்னும் கொஞ்சம் உப்பு ஏன் கூடப் போடாமல் இருந்தோம்'' எனப் பொருமுவாள் சீதா.




ராகவன் நேராகச் சமையல் அறைக்குள் நுழைந்து, ''வாருங்கள் மாமா!'' என்றான்.

காலியாயிருந்த தோசை மாவு அடுக்கும் மாமா விட்ட ஏப்பமும் — ராகவனுக்கு அன்றைய இரவு உணவு வெறும் மோர் சாதம் மட்டுமே என்பதை அறிவுறுத்தியது.

''போதும்... போதும் என்றால் கேட்க மாட்டேன் என்கிறாள்... வயிறு ரொம்ப ஹெவி'' என்ற மாமா நடு ஹாலில் உட்கார்ந்து மாம்பழத்திற்குத் தோல் சீவிச் சாப்பிட ஆரம்பித்தார்.

''என்ன ரொம்பச் சோர்ந்து போயிருக்கிறாய்?'' என்று கேட்டார் ராகவனைப் பார்த்து.

ராகவனுக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றியது.

''எல்லாம் ஆபீஸ் கவலைதான் மாமா'' என்றான்.

''ஆபீஸ் கவலையா?... ஏதோ பிரமோஷன்எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகச் சீதா சொன்னாளே!''

ராகவன் சீதாவை ஒரு முறை முறைத்தான்.

''பிரமோஷனா?... இருக்கிற வேலை தக்கினால் போதாதா?... இந்த வருஷம் கம்பெனிக்கு ஏக நஷ்டம். ஆட் குறைப்புச் செய்யப் போகிறார்கள்.''

''நீ ஏன் பயப்படுகிறாய்? உனக்குத்தான் பதினைந்து வருஷ சர்வீஸ் இருக்குமே...''

''பிரைவேட் கம்பெனியில் அதெல்லாம் என்ன கணக்கு மாமா. வேண்டப்பட்டவர்கள், வேண்டாதவர்கள் என்றுதான் பார்ப்பார்கள்.''

''வேறு இடம் பார்த்துவைத்திருக்கிறேன். பத்தாயிரம் ரூபாய் டெபாசிட் கேட்கிறார்கள்...''

''அவ்வளவுதானே?... இவன் போகச் சொல்வதற்கு முன்னால் அங்கே போய் உட்கார்ந்து கொள்ளலாமே?''

''இப்படி ஒரு நிலைமையை எதிர்பார்க்கவில்லை. கடன் வாங்கி இந்த வீட்டை வேறு கட்டிவிட்டேன்.... இப்போது நான் எப்படி அவ்வளவுபெரிய தொகையைப்புரட்டுவது?''

மாமா சட்டென்று மௌனமானார்.

''யோசிக்க வேண்டிய விஷயம்தான்'' என்றார். வாங்கி வைத்திருந்த வெற்றிலை கூட அன்று அதிகம் செலவழியவில்லை.

ராகவன் சாப்பிடும்போது சீதா தனியாக விசாரித்தாள் மிகுந்த கவலையுடன். ''இதெல்லாம் என்ன?... நேற்று பிரமோஷன்னு..''

ராகவன் உதட்டில் கையை வைத்து எச்சரித்தான். ''சும்மா ஒரு பேச்சுக்குச் சொன்னேன். இரும் நாளைக்கே மூட்டையைக் கட்டிக் கொண்டு புறப்பட்டு விடும் பார்!'' என்றான்.

ராகவன் ஜோஸ்யம் பலித்தது.

மறுநாள் மாமா ஊருக்குப் புறப்பட்டு விட்டார். வழக்கமாகக் கேட்கும் இருபது முப்பது கூடக் கேட்கவில்லை.

நான்கு மாதங்கள் ஓடிவிட்டன. மாமா மறுபடியும் அவனைப் பார்க்க வரவில்லை.

"நன்றாகப் பயமுறுத்தி அனுப்பிவிட்டேன். கிழம் இன்னமே வராது" என்றான் ராகவன் திடமாக.

கிழம் வரவில்லைதான்; தந்தி வந்தது. அவருக்கு உடம்பு சீரியஸ்ஸாக இருக்கிறதாம்.

ராகவன் லட்சியம் செய்யவில்லை.

நான்கு நாட்கள் சென்ற பின்னர் கறுப்புக் கட்டமிட்ட கார்டு வந்தது — மாமா போய் விட்டதாக.

ராகவன் அப்போதும் பேசாமல் இருந்தான்.

பதினைந்து தினங்கள் சென்ற பிறகு—

காலையில் யாரோ பெரியவர் கதவைத் தட்டினார். ராகவன் கதவைத் திறந்து விசாரித்தான்.

"நான் குற்றாலலிங்கம்... கணேசன் சிநேகிதன்... ஊரிலே பெரிய மிராசு... உங்களிடம் ஒரு விஷயமா...."

கணேசன் எனது மாமாவின் பெயர். வந்தவர் பெரிய மிராசு என்பது அவர் தோரணையிலிருந்தே புரிந்தது.

ராகவன் அவரை உபசரித்தான். கீதா காப்பி கலந்து வர ஓடினாள்.

"உங்கள் மாமா உங்களை மிகவும் எதிர்பார்த்தார்.... சாகு முன்னே இந்தக் கவரை என்னிடம் தந்தார். உங்களிடம் நேரில் தரச் சொன்னார்."

ராகவன் கவரைப் பிரித்துப் பார்த்தான். கிட்டத்தட்ட ஐநூறு ரூபாய் பணம். கூட ஒரு கடிதம். கிழவர் அவனிடம் வாங்கிப் போயிருந்த "கைமாற்று" விவரம் — தேதியும் பணமும்.

ராகவன் பிரமித்துப் போனான். இத்தனை நாணயமா?

வந்தவர் இன்னுமொரு பாஸ் புஸ்தகத்தை நீட்டினார். "இது அவர் பணம் போட்டு வைத்திருந்தது. வீட்டையும் நிலத்தையும் போன மாதம்தான் விற்றார்.... இருபதாயிரம் ரூபாய் வந்தது.... உங்கள் மனைவி பெயருக்குத் தரும்படி போட்டிருக்கிறார். "என் பெண் இருந்தால் கூட இப்படிக் கவனித்துக் கொள்ள மாட்டாள்" என்று சொல்லிக் கொண்டே இருப்பார்."

அரை மணி நேரம் கழித்து வந்தவர் போய்விட்டார். ஆனால் ராகவனும் கீதாவும் திக்பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தனர். எட்டாத உயரத்திலிருந்து மாமா பயங்கரமாகச் சிரிப்பது போல் தெரிந்தது. "இப்போது என்னை நீ கூப்பிட்டாலும் வரமாட்டேனே!" என்று கெக்கலிப்பது போல இருந்தது.

ராகவன் இரண்டு விஷயங்களைத் தீர்மானமாகச் சொன்னான்.

"அந்தப் பணத்தை அப்படியே ஒரு முதியோர் இல்லத்துக்கு டொனேஷனாகத் தர வேண்டும். இரண்டாவது — மாதம் ஒரு முறை யாராவது ஏழை வயோதிகரை அழைத்து வயிறார உணவிட வேண்டும்.

"நான் செய்த பாவத்துக்கு இது போதாது!" என்றான் ராகவன்.

கீதா மறுத்துப் பேசவில்லை.

---

**பதிலடி ஜோக்ஸ்**

"ஏண்டி கீதா, உனக்குக் கல்யாணமாமே? பாவம், அவர் எப்படித்தான் உன் சமையலைச் சாப்பிட்டு உயிர் வாழப் போகிறாரோ!"

"எனக்கும் பாவமாகத்தான் இருக்கிறது. ஆனாலும் அவர் தலையெழுத்து அதுதான் என்றால் நான் என்ன செய்ய முடியும்!"

—சரஸ்வதி இராசேந்திரன்

"வெளியூர் போகிறபோதெல்லாம் எதற்காக உன் மனைவியின் படத்தையும் கூடவே எடுத்துப் போகிறாய்?"

"எப்பவாவது வீட்டு ஞாபகம் வந்தால் அதை எடுத்துப் பார்ப்பேன். வீடு திரும்பணும்கிற ஆசையே போய் விடும்!"

—நெ.மி.

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!

**நைஸில்**
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.

2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'

**வாங்குவீர் நைஸில்.**
**விரட்டுவீர்**
**வியர்க்குருவை.**
**பால்கம் பவுடரைவிட**
**குறைந்த விலையில்!**

மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை
யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை
உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்
படுத்தும் கிருமி
களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத
மளிக்கிறது.

GN-79-PR-TM

# ஒரு சங்கமத்தைத் தேடி

வாஸந்தி

## 21

தாரா வழக்கமான உற்சாகத்துடன் இருந்தாள். அவனைப் பார்த்துக் கையை நீட்டி,

''ஹல்லோ டாட்!'' என்றாள்.

அவனுக்கு உடனே பேச முடியவில்லை. வார்த்தைகளை வெளியில் கொட்ட முடியாதபடி உள்ளே பொங்கிய உணர்வலைகளின் விளிம்பில் அவை நுரையாய் மிதந்து நின்றன. கன்னத்தில் செம்மை ஏறிற்று.

அவள் கை அதிக மிருதுவாக, முகம் அதிக மென்மையாகப் புதிய சோபையுடன் தெரிந்தன.

''எனக்கு ஆச்சரியமா இருக்கு தாரா! காலையிலே நீ கிளம்பும்போது ஒரு சந்தேகமும் தோணல்லே. இத்தனை சுருக்கிலே குழந்தை பிறந்துடுத்தா?''

அவள் செல்லமாக அவனது கையை அழுத்தினாள்.

''நீயும் நானும் அப்படித்தான் பிறந்திருப்போம்! ஒரு லேபருடைய கதையைக் கேட்டுண்டிருந்தேன். எனக்கு 'லேபர்' வந்துடுத்து! கொஞ்ச நேரம் தாக்குப் பிடிக்கலாம்னு அந்தக் கேஸை ரிஜிஸ்டர் பண்ணி அவளை அனுப்பற சமயத்திலே உடனே ஆஸ்பத்திரிக்கு வரணும்னு புரிஞ்சு போச்சு. இங்க வந்த முக்கால் மணி நேரத்திலே குழந்தை பிறந்தாச்சு!''

அத்தனை சரளமான விஷயமா அது என்று அவனுக்கு நம்ப முடியாத திகைப்பாக இருந்தது.

''உனக்கு ரொம்ப அசட்டுத் தைரியம் தாரா!''

''உன்னுடைய அசட்டு பயத்தை நான் பாலன்ஸ் பண்ண வேண்டாமா?''

அவனுக்குச் சிரிப்பு வந்தது.

''ரெண்டு அசடுகளுக்கும் பிறந்த அசட்டுக் குழந்தை எங்கே?''

''அதை இன்னிக்குத் தனியாத்தான் வெச்சிருப்பா. காண்பிக்கச் சொல்றேன்.''

மலர் மொட்டாய் நர்ஸ் ஏந்தி வந்தாள். ஒரு நூதன உணர்வு நாடி நரம்பெல்லாம் வியாபிக்க அவன் குழந்தையை வாங்கிக் கொண்டான்.

ரோஜாப்பூ மாதிரி இருந்தது. தலை கிட்டத்தட்ட வழுக்கையாய், இலேசான செம்பொன் நிற மயிருடன், கைகள் இரண்டும் வாழைப் பூவின் உள்ளிதழ்களாய்...

''எத்தனை அழகு தாரா!''

''எல்லாக் குழந்தைகளும் இப்படித்தான் இருக்கும் 'யார்'!''

''நீ சித்தப் பேசாம இரு. என் குழந்தை எனக்கு உசத்தி!''

''ஓ. கே, ஓ.கே!''

''ஏன் கண்ணை மூடிண்டிருக்கு?''

''யாராவது அனுவசியமாப் பாராட்டினா அதுக்குப் பிடிக்கறதில்லே....!''

அவன் பெரிதாகச் சிரித்தான்.

''அம்மாவுடைய வாயாடித் தனத்தைக் கண்டுதான் அது வெட்கப்படறது!''

ஆஸ்பத்திரியிலிருந்து கிளம்புவதற்கு முன் அவன் திடீரென்று ஞாபகம் வந்தவனாய்க் கேட்டான்.

''நேத்து லோபோ உன்னைப் பார்த்தாராமே. நீ எங்கிட்டச் சொல்லவேயில்லையே?''

அவள் முகத்தில் சட்டென்று ஒரு மாறுதல் தெரிந்தது.

''சொல்ல மறந்துட்டேன், ஸாரி. என்ன சொன்னார்?''

அவர் சொன்னதைச் சொல்வதா வேண்டாமா என்று யோசித்து விட்டு அவள் மெல்லச் சொன்னாள்.

''குழந்தை பிறக்கப் போற சமயத்திலேயும் சங்க வேலைன்னு நீ ஏன் அலையணும்னு கேட்டார்!''

அவள் பரிகாசமாகச் சிரித்தாள்.

''எத்தனை கரிசனம் அவருக்கு!'' என்றாள் ஆங்கிலத்தில். ''கார்த்திக்! அந்த மனுஷன் ஒரு ஃபிராட்!''

அவனுக்கு மெலிதாகக் கோபம் வந்தது.

''இதப் பார் தாரா! அவர் எந்த மாதிரி மனுஷனானாலும் எனக்கு பாஸ். என்னைப் பொறுத்தவரைக்கும் ஒரு நல்ல ஆபீஸர்!''

''உனக்குத்தான் அவர் பாஸ். எனக்கில்லை. நா சங்க வேலை செய்யறது அவருக்கு ஏன் உறுத்தணும்?''



இன்றைக்கு அதற்கான காரணத்தை இவளிடம் விஸ்தரிக்க வேண்டாம் என்று அவன் பேசாமல் இருந்தான்.

அவள் விடாமல் தொடர்ந்தாள்.

''ஏன்னு சொல்றேன். எங்க சங்கம் அவர் மேலே ஒரு கேஸ் போடப் போறது.''

அவன் திடுக்கிட்டு நிமிர்ந்தான். ''ஏன்?''

''ஒரு பெண் ஸ்டெனோ கிட்ட அவர் முறைக்கேடா நடந்ததுக்காக. அந்தப் பெண் எங்க சங்கத்திலே மெம்பர்.''

''யார் அது?''

''ரூபான்னு பேர்.''

''அவ ரிஸைன் பண்ணி ஆறு மாசமாச்சு!''

''இந்தக் காரணத்துக்காகத்தான் அவ ரிஸைன் பண்ணினா.''



அவள்: மாலாவோட வீட்டுக்காரருக்
குக் கோபம் வந்துட்டா 'உரி உரி'ன்னு
உரிச்சிடுவாராம்!
இவள்: அதானே பார்த்தேன்... அவள்
எப்பப் பார்த்தாலும் வெங்காய சாம்
பார், உருளைக் கிழங்கு பொடிமாஸ்,
பூண்டுக் குழம்பு இதெல்லாம் எப்படி
வைக்கிறான்னு இப்பத்தானே புரியுது!
—அ. வசந்தா

அவன் சில விநாடிகள் நினைவுகூர்ந்தான். அவனுக்கு உள் விஷயம் ஏதும் தெரிந்திருக்கவில்லை.

''என்னவா யிருந்தால் நமக்கென்ன தாரா?'' என்றான் எரிச்சலுடன்.

அவனை அவள் நேரிடையாகப் பார்க்காமல் தன் நகங்களைத் தீவிரமாக ஆராய்ந்தாள்.

''போதிய ஆதாரங்களோடு எங்கள் மெம்பர் ஒருத்தி உதவி கேட்டு வரும்போது நாங்கள் மறுக்க முடியாது கார்த்திக்...''

அவனுக்குச் சுருசுருவென்று ஆத்திரம் வந்தது.

''உன்னுடைய இந்தச் செய்கை என்னை எப்படிப் பாதிக்கும்னு நீ யோசிச்சுப் பார்த்தியா?''

சட்டென்று புரிந்து கொண்டவளாய் அவள் அவனை வியப்புடன் பார்த்தாள்.

''ஓகோ, அவர் உன்னை இந்தக் கோணத்திலேந்து பேசி திசை திருப்பப் பார்க்கறாரா? நா ஃப்ராட்னு சொன்னது ரொம்பக் கரெக்ட்தான். என்னைக் 'கம்யூனிஸ்ட்'னு லேபில் பண்ணியிருப்பாரே?''

அவன் மேற்கொண்டு பேசப் பிடிக்காமல் எழுந்தான்.

அலையலையாய்க் கரிய கூந்தல் தலையணையில் விரிந்திருக்க, சித்திரம் போன்ற அந்தப் பளிங்கு முகத்தைப் பார்க்கையில் பரிவு மிகுந்த வேட்கை எழுந்தது. அவன் சமாதானமாகச் சொன்னான்.

''இதப்பார் தாரா. நீ இப்ப ஒருத்தனுக்கு மனைவி என்கிறதை நீ புரிஞ்சுக்கணும். ஒரு தனி ஆள் மாதிரி சுதந்திரமா இயங்க முடியாது.''

அவள் சிறிது நேரம் ஏதும் சொல்லாமல் களைப்படைந்தவள் போல் கண் மூடிப் படுத்திருந்தாள். பிறகு கண்களைத் திறந்து, வறண்ட குரலில் சொன்னாள்:

''என்னுடைய கோபமெல்லாம் காரணமில்லாத கோபமில்லே கார்த்திக். வாஸ்தவத்திலே இந்தக் காரணம் எல்லாம் ரொம்பப் பழசு. பல நூற்றாண்டுகளாய்த் தொடர்ந்து வர காரணங்கள் – வேர் விட்டுக் கிளை பரப்பிப் பயங்கரமா வளர்ந்து போய்விட்ட அதனுடைய பயங்கரத்தை உணராத ஜடக் கும்பல்லே சில பெண்கள் ஜடமாப் போகாம கோபப்படறு என்கிறது ரொம்ப ஆரோக்கியமான விஷயம் கார்த்திக்! நீ அதைப் புரிஞ்சுக்கணும்!''

அவனுக்குப் புரியவில்லை. அவள் அதிகம் பேசினால் அதிகமாகக் குழம்பிற்று.

அவள் சட்டென்று அவனுடைய கையைப் பற்றி மென்மையாகச் சிரித்தாள்.

''என்னுடைய பொறுப்பு இப்பக் கூடிப் போச்சு கார்த்திக். ஐ ஆம் எ மதர் நௌ.''

அவளுடைய குரலும் வார்த்தைகளும் காரணம் புரியாத நெகிழ்ச்சியை ஏற்படுத்தின.

''எக்ஸாக்ட்லி'' என்றான் அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு. ''கொஞ்ச நாளைக்கு எல்லாத்தையும் மறந்து குழந்தையைக் கவனி. நா சொல்றதைக் கேப்பியா?''

''ஓ கே, பாஸ்!'' என்று அவள் சிரித்தாள். பிறகு வேடிக்கையாகச் சொல்வது போல் ''டோன்ட் டிஸ்கஸ் யுவர் வைஃப் வித் யுவர் பாஸ்!'' என்றாள்.

''நா எதுக்குப் பேசறேன்?'' என்று அவன் எழுந்தான். ''எனக்கு வேற வேலையில்லையா? நா கிளம்பறேன் தாரா. எல்லாருக்கும் தகவல் சொல்லணும்!''

''டங்கோராப் போடப் போறியா ராஜகுமாரன் பிறந்தான்னு!''

''என்ன வேறு செய்வேன் என் பிள்ளைக்கு. அது என் இஷ்டம்!'' என்றான் விறைப்பாக.

அவள் அதற்குச் சிரித்ததை ரசித்தபடி அவன் விரைந்தான்.

செய்தியை அறிந்து தங்களது நாகரிகத்துக்குத் தகுந்தபடி இரண்டு வீடுகளும் சந்

தோஷத்தைத் தெரிவித்தன. கிருஷ்ணமூர்த்தி அமர்க்களமாகப் பார்ட்டி கொடுத்தார். பெண்ணும் பேரனும் ஆஸ்பத்திரியில் இருக்கும்போதே பெரிய மலர்ச் செண்டுகள் கொண்டு வந்து நிறுத்தி அறைக் குழந்தையைப் போட்டோ எடுத்தார் தாரா தடுத்தும் கேளாமல். 'என் பேரனைப் போட்டோ எடுக்க எனக்கு நீ தடை சொல்ல முடியாது' என்றார். கார்த்திக்கின் அப்பா சிரமமாகப் புண்ணியாகவசனம் செய்வதில் பிடிவாதமாக இருந்தார்.

'வளைகாப்பும் சீமந்தமும்தான் பண்ணிக்க மாட்டேன்னுட்டா. ஈச்வரோ ரட்சதுன்னு பேசாம இருந்தேன். என் பேரனுக்கு நா செய்யறதை எப்படித் தடுக்க முடியும்?'

''நா சுதந்திரமா இயங்க முடியாதுன்னு நீ சொன்னது ரொம்ப வாஸ்தவமான வார்த்தை கார்த்திக்!'' என்ற தாராவின் வார்த்தைகளில் வேடிக்கை தொனிக்கவில்லை. வருத்தம் தொனித்தது. அவனைச் சலனப் படுத்தியது.

பாட்டி மிகவும் வற்புறுத்தியதில் ஆஸ்பத்திரியிலிருந்து தாரா நேராகப் பிறந்த வீட்டிற்குச் சென்றாள். ஒன்றரை மாதங்களில் சீராடல் அலுத்துப்போய் ஒரு வேலைக்காரப் பெண்ணுடன் தன் வீட்டுக்குத் திரும்பி அவன் கழுத்தில் கைகளை மாலையாகப் போட்டு,

''என்ன இருந்தாலும் இந்த வீடும் நீயும் தான் எனக்குச் சொந்தம் 'யார்' '' என்று அவள் சொன்னபோது அவன் உருகிப் போனான்.

குழந்தை கஷ்கு முஷ்கென்றிருந்தது. செக்கச் செவேல் என்று நிறமும், பொன்னிற சுருண்ட கூந்தலும், லேசான கண்களுமாய் செலுலாய்ட் பொம்மை மாதிரி கொள்ளை அழகாய் இருந்தது. தாராவை அவன் அணைத்து முத்தமிடும்போது கள்ளத்தனமாய்ச் சிரித்தது.

—''இவனும் ஒரு பெரிய 'ஃப்ராடா' ஆகப் போறான்!'' என்று அவன் பரிகசித்தான்.

''வேற நல்ல வார்த்தையே உன் வாயிலே வராதா?'' என்று அவள் அதட்டினாள்.

அவள் மெல்ல மெல்லத் தன் புதிய பாகத்துக்குப் பழகிக் கொண்டு விட்டதை, வெகு லாகவமாகத் தன் பழைய வேலைகளுக்கும் அதற்கும் உரசல் வராதபடி பார்த்துக் கொள்வதை அவன் கவனித்தான்.

அவள் சொற்ப நேரத்துக்குச் சங்க வேலைக்குப் போக ஆரம்பித்தாள்.

முதல் நாளே வெகு கோபத்துடன் திரும்பி வந்தாள்.

''உன்னுடைய பாஸ் தன் பணத் திமிரைக் காட்டிவிட்டார்!'' என்றாள்.

குழந்தையைக் கொஞ்சிக் கொண்டு உட்கார்ந்திருந்த அவன் அவள் சொன்னது காதில் விழாதவன் போல் பேசாமல் இருந்தான்.

''எத்தனை பணம் கொடுத்தாரோ என்னவோ அந்தப் பெண் கேஸை வாபஸ் வாங்கிண்டுட்டா! அதுமட்டுமில்லே. எங்க சங்கத்திலே மெம்பர்னு சொன்னேனே, அதையும் ராஜினாமா செய்துட்டா!''

தாராவின் முகம் உணர்ச்சி வசப்பட்டுச் சிவந்து போயிருந்தது. கோபத்தின் உச்சம் கண்ணில் நீராய் விளிம்பு கட்டி நின்றது. யாரோ ஒரு பெண்ணுக்கு ஏற்பட்ட துக்கத்திற்காக இவளுக்கு ஏன் இத்தனை பாதிப்பு என்று அவனுக்கு வியப்பு ஏற்பட்டது. அந்தத் துக்கத்திற்கு அந்தப் பெண்ணே சமாதானமாகிப் போன நிலையில் இவளுக்கு ஏன் இத்தனை ஆத்திரமும் துக்கமும் என்று திகைப்பாக இருந்தது.

''நீ ஏன் இதற்காக இத்தனை ஆத்திரப் படறே. உன்னையே யாரோ அவமானப் படுத்தின மாதிரி?''

அவள் சரேலென அவனைப் பார்த்தாள். தலையைக் குனிந்து மெல்லிய குரலில் சொன்னாள்:

டைரக்டர்: 'ஸ்டேஜ் எக்ஸ்பீரியன்ஸ்' அதிகம்னு சொன்னதை நம்பித்தானே இவரை நம்ம படத்துலே ஹீரோவா போட்டோம்?

புரொடியூசர்: ஆமாம்... அதுக்கென்ன?

டைரக்டர்: இதற்கு முன்னே கண்டக்டரா இருந்ததைத்தான் அப்படிச்சொன்னாராம்!

—அ. வசந்தா



''ஆமாம். எந்தப் பெண் அவமானப்பட்டாலும் நா அவமானப்பட்ட மாதிரி எனக்குப் பதற்றமேற்படறது. ஒரு பெண்ணுக்கு அநீதி ஏற்பட்டா மொத்தப் பெண் சமூகத்தையும் அது பாதிக்கும். எனக்குள்ள இது எவ்வளவு பெரிய துக்கத்தை ஏற்படுத்தறதுன்னு உன்னாலே புரிஞ்சுக்க முடியாது கார்த்திக். இட் இஸ் தி பயாலாஜிக்கல் டிஃபரன்ஸ் தட் மேக்ஸ் ஹர் வீக்! (It is the biological difference that mekes her weak!) இயற்கை ஏற்படுத்தியிருக்கிற இந்த நியதியைப் புரிஞ்சுண்டு அதை ஒரு சவாலா ஏத்துக்கறதுக்கும் சுய கௌரவத்தை இழக்காம இருக்கறதுக்கும் ரொம்பத் தைரியம்

வேணும். அந்த ரூபாவுக்குத் தைரியம் இல்லேன்னு தெரியறது!''

இவளுக்கு எத்தனை துல்லியமான மனசு என்கிற பச்சாதாபத்துடன் அவன் அவளைப் பார்த்தான். ரூபா தன் கேஸை வாபஸ் வாங்கிக் கொண்டது மிக நல்ல காரியம் என்கிற நிம்மதியுடன் சொன்னான்:

''அப்ப விடு! இத்தனை சுலபமா மனசு மாறிட்டான்னு அந்தப் பெண் மேலதான் தப்பு! அவ மேலதான் உனக்குக் கோபம் வரணும்!''

தாரா சற்று நேரம் பதில் ஏதும் சொல்லாமல் ஜன்னலுக்கு வெளியில் பார்வையைப் பதித்தாள். பிறகு மெல்லச் சொன்னாள்:



ஒருவர்: அதோ போறாரே! அவர் பசையுள்ள கையின்னு ஊர்லே பேசிக்கிறாங்களே! பெரிய பணக்காரரோ?
மற்றவர்: நீங்க ஒண்ணு! சினிமா போஸ்டர் ஒட்டற ஆளுங்க அவரு!
—அ. வசந்தா

''லோபோவுக்குத் தன் பணத் திமிரைக் காண்பிக்கக் காரணங்கள் இருக்கிற மாதிரி அவளுடைய பலவீனத்துக்கும் காரணங்கள் இருக்கு கார்த்திக்!''

ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்து ''சரித்திரக் காரணங்கள்'' என்றான் ஆங்கிலத்தில். ''அந்தச் சரித்திரங்கள் தொடர்ந்து கொண்டே வருவதைப் பற்றித்தான் எனக்குக் கவலையும் கோபமும். நா சொல்றதை நீ புரிஞ்சிண்டயோ?''

''நோ!''

''ஐ விஷ் யு டிட்!''

அவள் குரலில் தெறித்த துக்கம் அவனுக்கு உண்மையிலேயே புரிந்து கொள்ள முடியாததாக இருந்தது.

அவன் அவளருகில் சென்று அவள் தோள்களைப் பற்றி,

''நீ இதிலே இத்தனை ஆழ்ந்து போயிடக் கூடாது கண்ணு!'' என்றான். ''மெல்ல மெல்லத்தான் எண்ணங்கள் மாறும்.''

அவள் சட்டென்று அவனுடைய மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

''கார்த்திக், நீ என்னைப் புரிஞ்சுக்கணும். ஐ நீட் யுவர் ஹெல்ப்!''

தன் குழப்பத்தை மறைக்க அவன் சமாதானமாக அவளது அதரங்களில் தன் அதரங்களைப் பதித்தான். இவளை என்றாவது புரிந்து கொள்ள முடியுமா என்ற சம்சயம் மறுபடி ஏற்பட்டது.

**லோ**போவுடன் பேசுகையில் தாராவைப் பற்றின பேச்சே எழாமல் பார்த்துக்கொண்டான். லோபோ அடிக்கடி வெளியூர் சென்றது சௌகர்யமாக இருந்தது.

''குழந்தை பிறந்ததற்குப் பார்ட்டிகூடக் கொடுக்காமல் இருப்பது சரியான மதராஸி கஞ்சத்தனம்'' என்று பலர் முன்னிலையில் அவர் பரிகாசம் செய்ததை அவன் புன்னகையுடன் தாங்கிக் கொண்டான்.

''அடுத்த மாதம் பிறந்த நாள் வருகிறது. அப்பொழுது நிச்சயம் உங்களை ஏமாற்ற மாட்டேன்'' என்று சமாளித்தான்.

குழந்தையின் துரித வளர்ச்சி அவனுக்குப் பெரிய அதிசய அற்புதம் போல் இருந்தது. பிடிபடாத பெருமை ஏற்படுத்தியது. தன் வீட்டவர்களைப் பார்க்கப் போகும் சமயத்திலெல்லாம் அதை இடுப்பில் தூக்கிக்கொண்டு 'மூஷிக வாகன மோதக ஹஸ்தா' என்று பாடியபடி உத்தர சுவாமி மலைப் படிகளைக் கடக்கும்போது மேனி சிலிர்த்துப் போகும். 'பாருங்கள் என் குழந்தையை. பாருங்கள் என் குழந்தையை' என்கிறாற்போல் குன்றின் மேல் நின்றபடி இமை நட்சத்திரப் பூவாய்க் கண் சிமிட்டும் டில்லி மாநகரத்துக்கெல்லாம் பிரகடனப்படுத்துகிற பெருமையில் நெஞ்சு விம்மும்.

'அதோ பார் உம்மாச்சி, அதோ பாரு குதுப்மினார், அதோ பாரு....'' என்று ஆவேச உற்சாகத்துடன் அதற்கு அறிமுகப்படுத்துகையில் பக்கத்தில் தாராவுடன் நின்றிருந்த கோமதி பக்கென்று சிரித்தாள்.

''என்ன மன்னி?''

''நீங்க சொல்றது அதுக்குப் புரியல்லே. இங்கிலீஷ்லே பேசினாத்தான் புரியுமோ என்னவோ!''

''ஏன் மன்னி?''

''இதைப் பார்த்தா ஏதோ வெள்ளைக்கார குழந்தையாட்டம் இருக்கு. குருக்களாத்துக் குழந்தையாட்டம் இல்லே!''

அவன் பகபகவென்று சிரித்தான்.

''ஆஸ்பத்திரியிலே குழந்தை மாறிடுத்தோ என்னவோ, சினிமாவிலே வர மாதிரி, என்ன தாரா?''

தாரா பதில் சொல்லாமல் குதுப்மினாரைப் பார்த்தாள்.

(தொடரும்)

# ஈடு இணையற்ற கூரை




"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள்-உறுதியாக நீடித்து நிற்கும் ஈடு இணையற்ற கூரைகளுக்கு.

"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் சிக்கனத் திற்கும், சீரிய தரத்திற்கும், குறைந்த செலவில் நிரந்தரப் பாதுகாப்பைத் தருவதற்கும் தன்னிகரற்றவை.

அதிநவீன தொழில் நுட்பமும், மிகக் கடுமையான தரக்கட்டுப் பாடும்தான் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் இன்று முதன்மை யாகத் திகழ்வதின் காரணம்.

எனவேதான், மத்திய,மாநில அரசுத் துறையினரும், கட்டிடக் கலை வல்லுநர்களும் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளை ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கின்றனர்.

**Ramco**

"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளும் மற்ற உபகரணங்களும்- தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல நிரந்தரமான பாதுகாப்புக்கும்கூட.



சதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிமிடெட்
739, அண்ணா சாலை, சென்னை-600 002. போன் : 82006
பரிபூரண விற்பனையாளர்கள் : ராஜா சாரிடி டிரஸ்ட்

CAS/SACL/3/82 TAM / A

அவனுக்கு... நின்று அலுத்தது; உட்கார்ந்து அலுத்தது. படிப்பதற்கு அங்கே வசதி இல்லை. உட்காருகிற சௌகரியம்கூடக் கொஞ்சம் எழுந்து நின்று இளைப்பாறினால் எங்கே பறிமுதலாகி விடுமோ என்று பயப்படுகிற அளவுக்கு அந்தச் சிறிய அறையில் கூட்டம் நிரம்பித் தெருவிலும், தெருவை ஒட்டிய படிகளிலும் வழிய ஆரம்பித்திருந்தது. மனைவியின் பேச்சைக் கேட்டு இங்கே வந்து, இப்படி ஓர் அலுப்பூட்டும் அனுபவத்தில் மாட்டிக் கொண்டதற்காக அவன் தன்னைத் தானே நொந்து கொண்



டான். மனைவி பேச்சுக்கு உடனுக்குடன் ஒரு மறுப்புச் சொல்லாமல் உடன்பட்டு விடுகிற ஜாதியைச்சேர்ந்தவன்அல்ல அவன். என்றாலும், ஒருவாரமாய்த் தொடர்ந்து ஏறுமுகம் காட்டிய குழந்தையின் காய்ச்சலும், வழக்கமாக அவன் தேடிப் போகும் மருத்துவரின் 'பிரிஸ்கிரிப்ஷனுக்கு அடங்காத குதிரையாய் அது பாய்ச்சல் காட்டியதுமே இன்றைக்கு இப்படி யொரு 'விசேஷ' அனுபவத்துக்கு ஆட்படுத்திக் கொள்ள அவனை அரை குறையாய் இணங்க வைத்திருந்தன.

பொழுது... ஆமையாய், நத்தையாய் ஊர்ந்து கொண்டிருக்க, தன்னைச் சூழ்ந்திருக்கும் முகங்களில் அவர்களின் மனங்களை எண்ணங்களைப் படிக்கும் தேட்டத்தில் கொஞ்ச நேரம் அவன் தன்னை ஈடுபடுத்திக் கொண்டான். இரண்டு மாதக் குழந்தை முதல், பன்னிரண்டு வயதுப் பிள்ளை வரை, இடுப்பில் சுமந்தபடி, மடியில் கிடத்தியபடி முதுகில் தட்டிப் போட்டுச் சமாதானப் படுத்தியபடி... ஆர்வமும், அவசரமுமாய், பரபரப்பும், பயமும், பதற்றமுமாய்.. ஆனால் அதையெல்லாம் வெளிக் காட்ட வழியின்றி அடங்கிப் போய்... மருத்துவரின் அறைக் கதவிலேயே விழி பதித்துத் தங்கள் முறை வரப்போகும் நேரத்துக்காகத் தவமியற்றும் முகங்கள்! கல்லை உயிர்க்க வைத்த இராம பாதமாய், அவரின் கைபட்டுத் தளிர்க்கப் போகிற தங்கள் மழலைகளை எண்ணி, எதிர்பார்ப்புக்கள் கலந்த உணர்வுகளோடு பொறுமையுடன் காத்திருக்கும் முகங்கள்! அறையின் சுவர் தெரியாமல் மறைத்து மாட்டப்பட்டிருக்கிற ஆரோக்கியமான கொழு கொழு 'கிளாக்ஸோ' குழந்தைகளின் 'பாத் டப்'பில் அளைகிற... 'ஸ்டெத்தை'



# காத்திருத்தல்

—எம்.ஏ.சுசீலா—

''என்னங்க... இங்கே பாருங்க! குமாருக்கு ஒரேயடியாய் வேர்த்துக் கொட்டுது!''

மனைவியின் குரலால் கவனம் கலைந்தவனாய் அவன் திரும்பிப் பார்த்தான். ஜுரம், இறங்குவதன் அறிகுறியோ? 'கன்சல்டேஷன்' பணத்தைச் செலுத்தி 'கவுண்ட'ரில் பெற்றுக் கொண்ட டோக்கன் வில்லை, கையில் கனத்தது. இரண்டு பிரிவுகளாய்த் தடுக்கப்பட்டு, 'கிளினிக்'காய் உருமாற்றம் பெற்றிருந்த அந்தக் கார் ஷெட்டின் ஜன்னலில்லாத புழுக்கமும், மனித நெருக்கங்களின் அடைசலுமே வியர்வைக்குக் காரணம் என எண்ணியவனாய்க் குழந்தையின் முகத்தை உடலை, டவலால் மெள்ள ஒற்றித் துடைத்து விட்டுப் பக்கத்தில் கிடந்த பத்திரிகை ஒன்றை எடுத்து அதற்கு விசிற ஆரம்பித்தான். வார, மாத இதழ்களே இது போன்ற மருத்துவ மனைகளுக்காகத்தான் நடத்தப்படுகின்றனவோ என்று வியக்கிற அளவுக்கு அங்கே அவை குவிந்திருந்தன. குழந்தைக்கு விசிறிக் கை சோர்ந்து போன பின், அவற்றில் ஒன்றை எடுத்து அவன் புரட்ட ஆரம்பித்தான். பொதுவாகவே இம்மாதிரி காத்திருக்க நேருகிற இடங்களுக்குப் புத்தகத்தோடு செல்வதை ஒரு வழக்கமாகவே கொண்டிருந்தவன் அவன். 'ரேஷன் க்யூ'வின் திறந்தவெளி நகர்தல்களிலும், களைத்த நெடிய பஸ் பயணங்களிலும்... ஏன்... திருப்பதி கோயிலின் மூன்று நான்கு மணி நேரத் தர்ம தரிசனக் காத்திருப்புக்களிலும் கூடப் புத்தகமே அவனுடைய அலுப்பைத் தீர்க்கும் உற்ற தோழனாகப் பயன்பட்டிருக்கிறது. ஆனால்... இங்கே டாக்டர் அறைக்குள் நுழைவோரையும், வெளியேறுவோரையும் பார்த்தபடி, குழந்தையின் உடல்நிலை பற்றிய பயம் கலந்த எதிர்பார்ப்போடு... தன்னால் அரைப் பக்கம் கூட ஆழ்ந்து படிக்க முடியாமலிருந்த நிலை, அவனுக்கே வியப்பூட்டுவதாயிருந்தது.

பத்திரிகையை மூடி வைத்து விட்டு எழுந்தவன், தெருவுக்கு வந்து நின்று கொண்டான். 'சில்'லென்ற காற்று, உடலைத் தழுவிக் களைப்புக்குத் தற்காலிக விடை கொடுத்தது. நோயின் உபாதையாலும், அசௌகரியமான நிலைகளில் உட்காரவும் படுக்கவும் வைக்கப்பட்டதாலும் முனகி அழுத குழந்தைகளைத் தெருவில் வேடிக்கை காட்டிச் சில பெற்றோர் சமாளித்துக்கொண்டிருந்தனர். எதிரும் புதிருமாய் ஓடும் வாகனங்களின் வண்ணங்களை ரசிப்பதிலும் அவற்றின் எண்களைக் குருட்டுத் தனமாக மனத்தில் கூட்டிக் கழித்துக் கணக்குப் போடுவதிலும் நேரத்தைப் போக்கியவனுக்கு லேசாகப் பசித்தது. அலுவலகத்திலிருந்து ஒரு மணி நேரம் முன்னதாகவே அனுமதி பெற்று வீடு வந்தபோதிலும், குழந்தையை அழைத்துக் கொண்டு கிளம்பத்தான் பொழுதிருந்ததே தவிர டிபன் சாப்பிடக் கூட அவகாசமில்லை. ஒரு காப்பியாவது குடிக்க வேண்டுமென்று தோன்றவே உள்ளே சென்று மனைவியை அழைத்தான்.

''சரோ...வர்றியா, ஒரு காப்பி மட்டும் சாப்பிட்டுட்டு வந்திடலாம்.''

அவளை நிமிர்ந்து பார்த்த அவன் முகத்திலும் களைப்பு அப்பியிருந்தது.

மாட்டிய.... பால் அருந்துகிற – பல வகைக் கோலங்களில் பார்வையை அலைய விட்ட படி, அவற்றோடு தங்கள் பிள்ளைகளையும் ஒப்பு நோக்கிக் கொண்டு பெருமூச்சு விட்ட படி, தாய்மார்கள்! காலை விடிந்தது முதல்... இரவின் ஆரவாரங்கள் ஒடுங்கும்வரை, எதையோ வேட்டையாடப் போகும் அவசரத்தில் கால் தரிக்காமல், இயங்கிக் கொண்டே இருக்கும் மனித சக்தி... இப்படி ஒரு இடத்தில் கரை மீறாத சமுத்திரமாய்க் கட்டுண்டு தேங்கிக் கிடப்பது, அவனுக்கு ஒரு பக்கம் ஆச்சரியமாய் இருந்தது.

''அதுக்குள்ளே டாக்டர் கூப்பிட்டுட்டா என்ன செய்யறது? நீங்க எதுக்கும் எத்தனை நம்பர் போயிருக்குன்னு கம்பவுண்டரை விசாரிச்கட்டு வந்திடுங்களேன்!''

அங்கே டாக்டரின் அறை வாயிலை அடைத்துக்கொண்டு ஒரு சிறு கூட்டம் கம்பவுண்டரின் தலை கூடத் தெரியாமல் அவரைச் சுற்றி வளைத்திருந்தது. ஒருவர், ஆவேசம் வந்தவர் போலக் கத்திக் கொண்டிருந்தார்.

''இது என்னய்யா அநியாயமா இருக்கு? நாங்க வந்து அரை மணி நேரத்துக்கு அப்புறம் வந்தவங்களை முதல்லே விட்டிருக்கீங்க?''

''இதோ பாருங்க சார்! அநாவசியமாக் கலாட்டாப் பண்றீங்க. அவங்க மூணு மணிக்கே போன் பண்ணி டோக்கன் எடுத்து வைக்கச் சொல்லிட்டாங்க. அது தெரியுமா உங்களுக்கு?''

—இந்தக் கூச்சலில் இவனது விசாரிப்புகள் அமுங்கிப் போய்விட, திரும்பிச் செல்ல யத்தனித்தபோது...

''விடிய விடிய எட்டு டோக்கன்தான் போயிருக்காம்'' என்று தனக்கு வேண்டிய செய்தியை யாரோ ஒருவர் அஞ்சல் செய்ய, அவன் தனது டோக்கன் நம்பர் முப்பத்தைந்து என்பதை நினைவு படுத்திக் கொண்டான்.

அதே தெருவில் சற்றுத் தள்ளியிருந்த ஹோட்டலுக்குக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு இருவருமாய் மெள்ள நடந்து போய்விட்டுத் திரும்ப வந்தபோது இரவு மணி எட்டை நெருங்கிக் கொண்டிருந்தது. கூட்டம் கொஞ்சமும் வடியாமல் இருந்ததோடு, இப்போது புதிதாக அங்கே சில மருத்துவ விற்பனைப் பிரதிநிதிகள் வேறு முளைத்திருந்தார்கள். தன் மனத்தில் பட்ட சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளப் பக்கத்தில் இருந்தவரிடம் அவன் மெள்ளப் பேச்சுக் கொடுத்தான்.

''ஆமாம்... எத்தனை மணி வரைக்கும் தான் டாக்டர் இருப்பாரு?... எல்லாரையும் பார்த்து முடிக்க அவருக்கு நேரம் இருக்குமா?''

''நீங்க என்னங்க? ராத்திரி பன்னிரண்டு மணியானாலும் கடைசி பேஷண்டும் போனப்புறம்தான் டாக்டர் வீட்டுக்குப் போவாரு! அதுக்குத்தான் டோக்கன் எடுக்கிறதை ஆறரை மணியோட நிறுத்திட்டாங்க... பார்த்தீங்க இல்லே...''

அது சரி! டாக்டருக்கென்ன? பன்னிரண்டு மணியானாலும் கடைசி நோயாளியைப் பார்த்துவிட்டுக் காரில் ஏறி வீட்டுக்குப் பறந்துவிடலாம்! புறநகர்ப் பகுதியிலுள்ள வீட்டுக்குப் போகக் கடைசி பஸ் பத்து மணியோடு சரி என்ற பயத்தோடுபதைக்கும் தன்னைப் போன்ற நடுத்தர வர்க்கத்துக் கல்லவா பிரச்னை?... இரவு திரும்பிச் செல்வதற்கான 'ஆட்டோ' செலவை இந்த மாத பட்ஜெட்டில் சடு கட்டுவது எப்படி என்ற கவலை, குழந்தையின் உடல்நிலையை விடவும் கூடுதலாக அவனைப் பாதிக்க ஆரம்பித்தது. அதே ஆத்திரத்தில் அவன் கேட்டான்.

''தினம் இதே மாதிரிக் கூட்டம் வருதில்லே! ஆறு மணிக்கு 'கிளினிக்' தொடங்கறதை நாலு மணியாக்கிட்டா... அவங்கவங்க வீட்டுக்குப் போக வசதியா இருக்குமில்லையா?''

பக்கத்து இருக்கைக்காரர் உடனடியாப் பதில் தந்தார்.

''டாக்டர் அவர் வீட்டுக்குப் பக்கத்திலேயே நர்சிங் ஹோம் ஒண்ணு வச்சிருக்காரு! அங்கே போயிடுவார்.''

''சரி... அப்பக் காலையிலே ஒரு இரண்டு மணி நேரம் பார்க்கக் கூடாதா?'' — அவனைப் போலவே காத்திருத்தலில் அலுப்புற்ற இன்னொருவர் கேட்டார்.

''பெரியாஸ்பத்திரிக்குப் போக வேண்டாமா?... அங்கே குழந்தை வைத்தியப் பிரிவுக்கே இவர்தான் தலைவராம்!... ஏதோ இவ்வளவு பெரிய கைராசியுள்ள திறமைசாலி டவுனுக்குள்ளே ஒரு 'கிளினிக்' வச்சிருக்காரோ பிழைச்சோமோ!''

—இவன் நினைவில், ஒரு கணம் ஆந்திர முதல்வர் என். டி. ஆர். வந்து போக... அந்தப் பெரியவர் தொடர்ந்து அடுக்கிக் கொண்டு போன புகழ் மாலைகளைக் கேட்க மனமில்லாதவனாய் மனைவியிடம் நகர்ந்தான்.

கையோடு கொண்டு வந்திருந்த பாலைக் குடித்துவிட்டுக் குழந்தை சிரித்து விளையாடிக் கொண்டிருந்தது. அவன் தொட்டுப் பார்த்தபோது ஜுரம் கணிசமாய்க் குறைந்திருப்பது நன்றாகவே புலப்பட்டது.

''என்ன சரோ! பேசாம வீட்டுக்குப் போயிடலாமா? ஆட்டோ சார்ஜாவது மிஞ்சும்.''

அவள், அவனை எரிப்பது போலப் பார்த்தாள்.

ஒருவன்: அந்த ஓட்டல் இட்லி மல்லி கைப்பூ மாதிரி இருக்கும்.
மற்றவன்: ரொம்ப வெள்ளையா, மென்மையா இருக்குமா?
ஒருவன்: ஊஹூம். நான் குறிப்பிடுவது இட்லியின் சைஸ்.

—எஸ். ராஜாராமன்





## முன் ஜாக்கிரதை ஜோக்ஸ்

முதலாளி: எனக்கு முன் ஜாக்கிரதையுள்ள வேலைக்காரன்தான் தேவை.

வேலைக்கு வந்தவன்: அப்படின்னு என்னை வேலைக்குச் சேர்த்துக்குங்க; ஆனு இப்பவே எனக்கு மூணு மாச சம்பளத்தை அட்வான்ஸாக் கொடுத்துடுங்க!

— ஜி குமரேசன்.

''டாக்டர், எனக்கு ஒரு விசித்திரமான நோய். எப்பப் பார்த்தாலும் பொய் பேசத்தான் வருது!''

''சரி, கன்சல்டிங் ஃபீஸ் முப்பது ரூபாய் கொடுங்க!''

''அதான் வந்தவுடனேயே கொடுத்துட்டேனே!''

—எம். பாஸ்கர்

''இப்பக் காய்ச்சல் விட்டிருக்குன்னு போயிட்டோம்னு... நாளைக்கு மறுபடியும் இதே மாதிரி நேரத்தையும் பணத்தையும் நம்மாலே செலவழிக்க முடியுமான்னு யோசிச்சுப் பாருங்க.''

அவன் — அவள் இருவருடைய அலுவலக நண்பர்களும் அந்த மருத்துவருடைய பெயரைப் பலமாகச் சிபாரிசு செய்திருந்தார்கள். இந்த நிலைவரை வந்து விட்டு, அவரைப் பாா்க்காமலே புறமுதுகிட்டுப் போவது அவனுக்கு... இப்பொழுது ஒரு கௌரவப் பிரச்னையாகவே மாறி விட்டதாக அவனுக்குத் தோன்றியது.

கடிகார முள் பத்து முப்பத்தைந்தை எட்டுகையில் அவர்களுக்கு அழைப்பு வந்தது. ஏற்கனவே டோக்கன் பதிவு செய்கையில் குறித்து வைக்கப்பட்டிருந்த 'டெம்பரேச்சர்' மற்ற விவரங்கள் அடங்கிய குறிப்புக்களில், கண்களை அலைய விட்ட பின், 'ஸ்டெதாஸ் கோப்'பால் குமாரைச் சோதித்து விட்டு, அவசரமாக 'பிரிஸ்கிரிப்ஷன்' எழுதத் தொடங்கினர் டாக்டர்.

''ஒரு வாரமாய் காய்ச்சல் இறங்கவேயில்லை டாக்டர்! அங்கேயே பக்கத்திலே ஒரு டாக்டர் பார்த்தார்!'' — இவன் ஆரம்பித்தான்.

''மூணு நாளைக்கு இந்த மருந்தைக் கொடுங்க... அப்புறம் பார்க்கலாம்.''

''வேற எதுவும் காம்ப்ளிகேஷன்....''

''இதைக் கொடுங்க முதனிலே... அப்புறம் வந்து பாருங்க! நெக்ஸ்ட்!''

மருந்துச் சீட்டைப் பிரித்துப் பார்த்தபடி வெளியே வந்தவன், அவளையும் குழந்தையையும் உட்கார வைத்து விட்டு, ஆட்டோவைத் தேடிப் போனுன். வண்டி கிளம்பியதும்,

''என்னங்க... மருந்து வாங்க வேண்டாமா?... போற வழியிலே, திறந்திருக்கிற கடையாப் பார்த்துக் கொஞ்சம் நிறுத்தச் சொல்லி வாங்கிடுங்க.'' என்ருள் அவள்.

''எல்லாம் காலையிலேபார்த்துக்கலாம்!... டிரைவர்... நீங்க நேரே போங்க!''

''என்னங்க நீங்க....''

''கொஞ்சம் பேசாமே வாயை மூடிக்கிட்டு வா சரோ!... எனக்கென்னமோ சந்தேகமா இருக்கு!''

'சந்தேகமா...?' — திறக்க எண்ணிய அவளது வாய், அவனது முக இறுக்கம் கண்டு மூடிப் போயிற்று.

வீட்டினுள் நுழைந்து, விளக்கைப் போட்டதும், ஒரு வாரமாய்க் கொடுத்து வந்த பழைய மருந்துச் சீட்டைத் தேடி எடுத்த அவன், அதற்கும் இப்பொழுது வாங்கி வந்த பிரிஸ்கிரிப்ஷனுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை என்பதை நேரடியாகப் பார்த்து ஒரு முறை நிச்சயப்படுத்திக் கொண்ட பின், நாலு மணி நேரக் காத்திருத்தலில் கிடைத்த அந்தத் துண்டுச் சீட்டை நான்காய்... எட்டாய் மடித்து, மெள்ளக் கிழித்தான். தூங்கிப்போன குழந்தையைத் தொட்டிலில் கிடத்திவிட்டு அப்போதுதான் வந்த சரோ, பதறிப்போய்...

''என்னங்க! பைத்தியம் பிடிச்சுப் போச்சா உங்களுக்கு....?''

என்று கையைப் பிடிக்க... அவளைக் கையமர்த்தி விட்டுக் கிழிந்த துண்டுகளைப் பொறுக்கிக் கொண்டு போய்க் குப்பைக் கூடையில் எறிந்து விட்டு வந்தவன், அவளுக்கு நிதானமாய் விளக்க ஆரம்பித்தான்.

# கண்டுபிடிப்பு





## வீடியோ பிரபலமாகிவிட்டது..

ஆனால் கையாள்வது சிரமமாயிருக்கிறது. காமிரா தனி, ஒலி ரிகார்டிங் கருவி தனி, தவிர பல சமயங்களில் மின் இணைப்புக்குச் சக்தி வாய்ந்த பாட்டரிப்பெட்டி தேவைப் படுகிறது. இம்மூன்றையும் ஒருங்கிணைப்பதில் ஜப்பானிய 'ஸோனி' நிறுவனம் வெற்றி பெற்றுவிட்டது. BMC-100 என அழைக்கப் படும் இந்தக்காமிராவின் எடை ஐந்தரை பவுண்ட்தான். ஒரு டேப்பில் மூன்று மணி நேரம் படம் பிடிக்கலாம்; ஒலியையும் அதே நேரத்தில் பதிவு செய்யலாம். உடனேயே வழக்கமான வீடியோ காஸெட் டெக்கில் போட்டு டி. வி. திரையில் பார்க்கலாம். ஒன்றரை பவுண்ட் எடையுள்ள பாட்டரி, காமிராவின் கைப்பிடிக்குள் பதுங்கிக் கொள்கிறது! பாட்டரி பலவீனமடைந்தால் மறுபடி 'சார்ஜ்' ஏற்றிக்கொள்ளலாம்.

## ஆழ்கடலுக்குள் மூழ்கி...

அதன் வளங்களை வெளியே எடுத்து வருவோரும், அதன் அதிசயங்களை ஆய்வோரும் சுறா மீன்களை எண்ணிச் சதா அஞ்சுவர். சுறாவிடம் சிக்கினால் தப்பிப்பது ரொம்பக் கஷ்டம். இப்போது அமெரிக்கர் ஒருவர் ஆழ்கடலில் மூழ்குவோருக்குக் கவச உடை தயாரித்துள்ளார். வழக்கமான 'டைவிங் ஸூட்' மேலாக எஃகுச் சங்கிலி வலை பின்னியிருக்கும். சுறா கடித்தால் அதன் பல் உடையுமே தவிர உடலை அது தீண்ட முடியாது! பழங்கால யுத்த வீரர்களின் கவச உடை தமக்கு இந்த ''ஐடியா'' கொடுத்ததாகக் கூறுகிறார் இதைக் கண்டு பிடித்த ஸாலேவன்.



# ன்னர்கள்

## ரெட் பழக்கத்தை டொழிக்க...

ம்புவோருக்கு. அல்லது குறைத்துக் ளவேனும் முயலுவோருக்கு உதவ காங்கில் ஒரு பிளாஸ்டிக் சிகரெட் கிடைக்கிறது. சிகரெட் பாக்கெட் பிரித்து இந்தப் பெட்டியில் அடுக்கிக் ா வேண்டும். இந்தப் பெட்டியில் ம் எலக்ட்ரானிக் கருவி ஒவ்வொரு பெட்டி திறக்கப்படும்போதும் ''பீப் என்று ஒலி எழுப்பி எச்சரிக்கிறது. திரையில் டிஜிடால் எண்கள் கடந்த நேரத்தில் எத்தனை சிகரெட் பிடித் ர் என்பதைக் காட்டுகிறது. இணைப் ள்ள ஒரு அலாரம் கடிகாரம் இரு டுகளுக்கு இடையில் எத்தனை பனை என்பதையும் கணக்கிடுகிறது. ந கணக்கு இதுவரை எவ்வளவு பாருளை நுரையீரல் சுவாசித்துள் பதை உணர்த்துகிறது. போதாக் ச் சராசரி அளவுக்கும் அதிகமாக ஒரு நாளைக்கு சிகரெட் பிடிக்க தால் ''நோ ஸ்மோக்கிங்'' என்ற ஒளிர்கிறது!









## டி. வி...

தின் கூர் அம்சமாக விளங் படுவதற்கில்லை. ஆனால் ம் மிகச் சிறிய டீ. வி. றத்துப் போக வசதியாக டோ நிறுவனம் தயா னிக் லோவோ எனப் ரு பவுண்டுதான். ந் அங்குலம். டீ.வி. ணம்: உயரம் ம்.; ஆழம்: 6.1 பதிப்பு நால வத்துக்கொள்

## கண்டுபிடிப்பு மன்னர்...

என்று ஜப்பானில் கோயாநாகி அழைக்கப் படுகிறார். இவர் விசித்திரமான கண்டு பிடிப்புகளுக்குப் பேர் போனவர். கண்டு பிடிப்புகளுக்குப் பேர் போனவர். ஊசி நிலையா யிருக்க ரிகார்ட் என் சுற்ற வேண்டும்? ரிகார்ட் நிலையாக இருக்க ஊசி ஏன் சுழன்று வரக் கூடாது? என்று யோசித்துச் செயலில் நிறைவேற்றினார். இவர் தயாரித்துள்ள ரிகார்ட் பிளேயரில் ஒரு டன் பொம்மை, ரிகார்ட் மீது சுற்றிச் சுற்றி வரும். பொம் மையின் அடியில் மறைவாக ஊசி இருப்பதால் ரிகார்ட் பாடும்!

'காதலரோ கணவன் மனைவியோ நடந்து சென்றால் ஒரு குடை எப்படிப் போதும்?' என்று யோசித்தார். ஒரு கைப்பிடியில் உள்ள பட்டனைத் தட்டினால் உயரே இரட்டைக் குடை விரியுமாறு தயாரித்தார்!

கரப்பான் பூச்சிகளைக் கண்டாலே பல ருக்குப் பிடிக்காது. ஆனால் அவற்றைக் கொல்வது அதைவிட அருவருப்பானது. கோயாநாகி கரப்பான் பூச்சிகளால் சகித்துக் கொள்ளவே முடியாத ஒலியை எழுப்பும் கருவி ஒன்றைக் கண்டு பிடித்தார். ஒலியால் விரட்டப்படும் கரப்பான் பூச்சிகள் ஓடிப் போய்விடும், பக்கத்து வீட்டுக்கு!

இருட்டில் செருப்பை அணிய முயன் றிருக்கிறீர்களா – குறிப்பாக இரவில் ரயில் பயணத்தின்போது? எந்தக் காலுக்கு எந்தச் செருப்பு தெரியாது; முன் பக்கம் பின் பக்கம் புரியாது; ஒரே தடுமாற்றம்தான். இதற் காக இடமோ வலமோ எந்தக் காலிலும் அணியக் கூடிய முன்னும் பின்னும் ஒரே மாதிரியான செருப்பைத் தயாரித்தார் கோயாநாகி!

நன்றி: நியூஸ் வீக்; பி. எச். பி.

**அனுபவக் கட்டுரை**



மகரிஷி மகேஷ் யோகி

# ஆழ்நிலைத் தியானம்

● ஓர் எக்ஸிக்யூடிவ். சாதாரணமாக அலுவலகத்திலிருந்து வந்ததும் பாட்டிலும் கையுமாகத் தம் தனி அறைக்குப் போய்விடுவார். இது தினசரிப் பழக்கம். எக்ஸிக்யூடிவ் ஒரு பயிற்சி வகுப்பில் சேர்ந்தார். பயிற்சி முடிந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகு, பயிற்சி அளித்தஆசிரியரைச்சந்திக்க வந்தார். 'எப்படி இருக்கிறீர்கள்?' என்று கேட்டார் ஆசிரியர். 'இத்தனை நாளில் ஒரே ஒரு முறை தான் பாட்டிலைத் தொட்டேன். தினசரி ஆபீசிலிருந்து வந்ததும் பிராக்டிஸ் முடிந்தவுடன் பாட்டிலைத் தொடவே தோன்றுவதில்லை!' என்றார் எக்ஸிக்யூடிவ்.

● ஒரு பிஸினஸ்மேன்; எப்போதும் கடுகடு சிடுசிடுதான். தமது கோபமும் கடுகடுப்பும் மீறுகிறபோதெல்லாம் கைநீட்டி அடித்தே விடுவார் வேலையாளாயிருந்தாலும் சரி, வேறு யாரா யிருந்தாலும் சரி. பயிற்சி எடுத்துக்கொண்ட இரண்டு மூன்று நாட்களில் பிஸினஸ்மேனின் போக்கில் பளிச் சென்று மாறுதல். கோபத்தையே காணோம். மனைவி பயந்து கொண்டே, ''என்னங்க, உடம்பு கிடம்பு சரியில்லையா?'' என்று கேட்டாள். வேலைக்காரர், ''எசமானுக்கு என்ன அம்மா? எப்பவும் போல இல்லையே?'' என்று கேட்டார். பிஸினஸ்மேன் தாம் புதிதாக எடுத்துக் கொண்ட பயிற்சியைப் பற்றி மனைவியிடம் விளக்கினார். ''நானும் அந்தப் பயிற்சி எடுத்துக்கலாமா?'' என்று கேட்டாள் மனைவி!

● நடுத்தர வயது முஸ்லிம் ஒருவர் பிராங்கியல் ஆஸ்துமா நோயால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். செய்தித் தாளில் விளம்பரம் பார்த்துவிட்டுக் குறிப்பிட்ட இந்தப் பயிற்சியை எடுத்துக் கொண்டார். தினசரி இரண்டு வேளை பயிற்சி செய்துகொண்டிருந்தவருக்குத் தமது உடல்நிலையில் நல்ல முன்னேற்றமும், இயல்பாக மூச்சு விடுவதில் சிரமமின்மையும் தெரிந்தன. ஆசிரியரை நேரில் சந்தித்து நன்றி தெரிவித்தார்.

இப்படிப் பலரும் பயனடைந்த அந்தப் 'பயிற்சி' என்ன? என் அனுபவத்தைச் சொல்கிறேன்...

**வெ**ள்ளிக் கிழமை. மாலை.

மணி ஆறரை.

அறையில் ஊதுவத்தி மணம் கமழ்கிறது.

நீண்ட நோட்டுப் புத்தகத்தில் பெயரையும் முகவரியையும் எழுதினேன்.

ஆழ்நிலை தியானம் பற்றிய தமிழ் – ஆங்கிலத் துண்டுப் பிரசுரங்கள் வழங்கப்பட்டன. ஆழ்ந்து படித்தேன்.

டி. எம். பற்றிய அமெரிக்க வெளியீடுகளில் அழகாக அச்சடிக்கப்பட்ட ஆர்ட் தாள்களில் மகரிஷி மகேஷ் யோகி புன்னகை செய்தார்.

நீங்கள் டி. எம். கற்றுக்கொள்ளத் தீர்மானித்து விட்டீர்களா? – வழிகாட்டி கேட்கிறார்.

ஆம் என்கிறேன்.

அப்படியானால் ஒரு மணி நேரத்துக்கு என் முன்னுரையைக் கேளுங்கள். டேப் இயங்கத் தொடங்குகிறது. வழிகாட்டியின் குரல்; ஆங்கிலத்தில்:

''இது எளிமையானது.

இந்தத் தியானத்தை தொடர்ந்து செய்து வந்தால் மனித மனத்தின் உணர்வுநிலை விரிவடைகிறது.

அச்சமும் பதற்றமும் அகலும். கவலையும் கலக்கமும் மறையும். சிந்தனை கூர்மையும் தெளிவும் அடைகிறது.

கடுமையான உழைப்பிலும் களைப்பின்றி இருக்க முடியும்.

ரத்த அழுத்தம் சீராகும். சரும நோய்கள் குறையும். இதய நோய், நரம்புத் தளர்ச்சி இவை அணுகா.

இது ஆக்க அறிவியல், சயன்ஸ் அஃப் கிரியேடிவ் இன்டெலிஜன்ஸ்.

இதை எந்த மதத்தினரும் செய்யலாம். இந்து, முஸ்லிம், கிறிஸ்துவர், பார்ஸி, யூதர், பாகுபாடே இல்லே.

கடவுள் நம்பிக்கை உள்ளவரும் செய்யலாம்; இல்லாதவரும் செய்யலாம்.

இது மிகப் பழைமையான, புராதனமான தியான முறை. ஜோதிர் மடம் சங்கராசாரிய சுவாமி ஸ்ரீ பிரம்மானந்த சரஸ்வதியிடமிருந்து மகரிஷி மகேஷ் யோகி கற்றுக் கொண்டு, எளிய முறை தியானமாக முறைப் படுத்தி, எங்களைப் போன்ற வழிகாட்டிகள் மூலம் பயிற்சி அளிக்கிறார்.

இதற்குக் கட்டணம் கிடையாது; அப்படியானால் உங்களுக்கு அக்கறை இராது. ஆகவே நன்கொடை உண்டு.''

—டேப் நிறுத்தப்பட்டு வழிகாட்டி அமர்கிறார்.

விண்ணப்பத் தாளைப் படித்துப் பூர்த்தி செய்கிறேன்.

எதற்காக டி. எம்.ல் சேருகிறீர்கள்?—ஒரு கேள்விக் கட்டம்.

ஆன்ம அபிவிருத்திக்கா?

மன அமைதிக்கா?

ஆரோக்கியமான வாழ்க்கைக்கா?

சிந்தனைத் திறன் ஒருமுனைப்பட்டு மேம்பாடு அடையவா?

கடைசிக் கேள்விக்கே என் 'டிக்' விழுகிறது.

**ஞா**யிறு காலை பயிற்சி ஆரம்பம். பத்து மணிக்கு. ஒன்பது ஐம்பதுக்கே அங்கே இருக்க வேண்டும்.

முதல் நாள் பயிற்சிக்கு வரு முன் அறை டஜன் பழம், ஒரு பாக்கெட் ஊதுபத்தி, கற்பூரம், இரண்டு முழம் சதம்பம் அல்லது மல்லிகைப் பூ மாலை, சுத்தமான ஒரு வெள்ளைக் கைக்குட்டை இவற்றை யெல்லாம் கொண்டு வரவும்.

பயிற்சிக்கு முன்னால் வெறும் வயிற்றோடு இருப்பது நல்லது.

காப்பி சாப்பிட்டிருந்தால் பத்து நிமிஷம்; டிபனாயிருந்தால் ஒன்றரை மணி நேரம்; சாப்பாடாயிருந்தால் மூன்று மணி நேரம் ஆகியிருக்க வேண்டும்.

சரி, ஞாயிறு 9-50க்கு வருகிறேன் என்று விடை பெற்றுக் கொண்டேன்.

'என்ன நடக்கப் போகிறது ஞாயிறு காலே?' என்று மனத்துக்குள் ஒரு படபடப்பு.

**ஞா**யிறு காலை மணி 9–50.

அறைக்குள் நுழையும்போது மெல்லிய ஊதுபத்தி மணம்.

தரையில் பாய், நடுவே மெத்தை தைத்த பெரிய கறுப்பு நாற்காலி.

ஊதுபத்தி, பழம், கற்பூரம், வெள்ளைக் கைக்குட்டை, மல்லிகைப்பூமாலை எல்லாம் தட்டில் வைத்தவுடன், மகேஷ் யோகியின் குருவுக்குப் பூஜை செய்கிறார் வழிகாட்டி.

நாற்காலியில் அமரச் சொல்கிறார். அமர்ந்தேன்.

இரு கைவிரல்களையும் கோத்துக் கொள்ள வேண்டும். ரிலாக்ஸ்ட் ஆக உட்கார்ந்து கொள்ள வேண்டும். சரி.

மந்திரம் சொல்லித் தரப்படுகிறது. ஒரே வாக்கியம், மிகச் சிறிய வாக்கியம். மிக எளிமையானது. உனக்குள் ரகசியமாக இருக்க வேண்டும். வெளியே சொல்லக் கூடாது. சரி.

ஆரம்பியுங்கள். கண்ணை மூடிக்கொண்டு வாய் விட்டுச் சொல்ல வேண்டும். பிறகு—வாய் விட்டுச் சொன்னது போதும். கண்ணை மெல்லத் திறக்கலாம்.

மெல்ல ஒலியைக் குறையுங்கள். கண்ணை மூடிக்கொள்ளுங்கள்.

ஒலியைக் குறைத்தாயிற்று. சற்று நேரத்துக்குப் பிறகு—

✕ தியானப் பயிற்சி



இன்னும் குறையுங்கள். சரி.
இனி மனத்துக்குள் சொல்லலாம்.
வேறு சிந்தனைகள் வந்து போனாலும் அது இயல்பானதுதான். ஒரே பிடிவாதமாக மந்திரத்தையே சொல்ல வேண்டும் என்பதில்லை.
இருபது நிமிடங்களுக்குப் பிறகு:
எப்படி இருந்தது? மந்திரம் சொல்லும் போது மூச்சு இயல்பாய் இருந்ததா?
இருந்தது: ஓரிரு தடவை பெருமூச்சு விட நேர்ந்தது.
உடம்பு இலேசாக இருந்தது போலத் தோன்றிற்று?
என்ன சொல்வது என்று தெரியவில்லை.
உறங்குவது போல் — கனவு காண்பது போல்?
• கொஞ்சம் வெறுமையாகத் தோன்றியது ஓரிரு கணங்களுக்கு.
புறச் சத்தங்கள் பாதித்தனவா?
பாதித்தன. ஆனால் தியானத்தைப் பாதிக்கவில்லை.
மாலையில் மறுபடி இருபது நிமிடங்கள் மந்திரத்தை மனசுக்குள் சொல்லவும்; நாளைக் காலையும்.
மறுபடியும் நாளை மாலை ஆறரை மணிக்குச் சந்திப்போம். குட்லக்.

**தி**ங்கள் மாலை ஆறு மணி.
ஆபீஸிலிருந்தா வருகிறீர்கள்? ஆம்.
தியானம் செய்யவும். இருபது நிமிஷங்கள். கண்ணை மெல்ல— மெல்லத் திறவுங்கள்.
இந்தப் பாரத்தைப் பூர்த்தி செய்யுங்கள். (தியானம் எப்படி இருந்தது எக்ஸெட்ரா)
இனி தியரிடிகலாகப் பார்க்கலாம். ஆழ்நிலை தியானத்தினால் உடலும் உள்ளமும் வலிமை பெறுகின்றன.
மகேஷ் யோகியின் டேப் ஒன்றைப் போடுகிறார் வழிகாட்டி.
இயல்பாக அதன் போக்கிலேயே மந்திரத்தைச் சொல்லுங்கள். உச்சரிப்பு பற்றிக் கவலைப்படாதீர்கள். வெவ்வேறு நினைவுகள் அவ்வப்போது வந்து உங்கள் மனசை இழுத்துக்கொண்டு போகும். பரவாயில்லை. இது சகஜம். இவை மன உளைச்சல்களாக வெளிப்பட்டு மனப் பளுவைக் குறைக்கும். மனசு லேசாகி விடும். மறுபடி மந்திரத்துக்கு வாருங்கள். டேப் நிறுத்தப்படுகிறது.
சரிதானே? நாளை மாலை பார்ப்போம். குட்லக்!

**மறு**நாள் அறிந்து கொண்டது:
தியானத்தின்போது நீங்கள் ப்யூர் கான்ஷியஸ்னஸ்—மெய்யறிவு நிலையை உணர்வீர்கள். அப்போது மனச் சுமைகள் அல்லது இறுக்கங்கள் வெளியேற்றப்பட்டு, தளர்த்தப்படுகின்றன. அதுதான் தீவிர மான இயக்கங்களுக்கு (Improved Mental Activity) அடித்தளமாக இருக்கிறது. இந்தத்தீவிரமானஇயக்கம் தீவிர உடல் இயக்கத்திற்கு (Improved Physical Activity) வழி செய்கிறது...

**பயி**ற்சியில் கடைசி நாள்.
அறையில் நுழைந்தவுடன் தியானம் இருபது நிமிடங்களுக்கு.

நேற்று நடத்திய பாடத்தில் ப்யூர் கான்ஷியஸ்னஸ் — மெய்யறிவு பற்றிச் சொன்னேன். இதையும் கடந்த நிலை ஒன்று உண்டு. அதைத்தான் காஸ்மிக் கான்ஷியஸ்னஸ் என்பார்கள். இதை வசமாக்கியவர்களை ஞானிகள் என்பார்கள்.
மகரிஷி மகேஷ் யோகியின் டேப் போடப்படுகிறது. முடிவுரையாக. வசீகரமான குரல். 'ஏதேனும் சந்தேகம் உண்டா? உங்கள் மந்திரம் நினைவிருக்கிறதா? என் காதோடு சொல்லுங்கள்' என்கிறார் வழிகாட்டி.
மந்திரம் மறக்கவில்லை.
தினமும் தொடர்ந்து தியானம் செய்யுங்கள். குட் லக்.

**உ**லகின் பல்வேறு பாகங்களில் டி. எம். பயிற்சி சொல்லித் தரப்படுகிறது. அதனால் என்ன பயன்கள் விளைகின்றன?
'ஆழ்நிலை தியானத்தில் கிடைக்கும் முதல் பலன்: உடலுக்கும் உள்ளத்துக்கும் தேவையான ஓய்வு. தியானத்தின்போது சுவாச வேகம் குறைகிறது. இதனாலேயே அலாதியான ஓய்வு கிடைக்கிறது.
தியானம் மன உளைச்சல்களை வெளியேற்றி விடுவதால் நரம்புத் தளர்ச்சி உண்டாவதில்லை. ரத்த அழுத்தம் சீராகிறது. தூக்கமின்மை தொலைகிறது. சிந்தனைத் திறன் கூடுகிறது; தெளிவடைகிறது. உடல் புத்துணர்ச்சி பெறுகிறது.'
—இவை யெல்லாம் விஞ்ஞானபூர்வமாக நிரூபிக்கப்பட்டதற்கு 'சயன்டிபிக் அமெரிக்கன் இதழில் ராபர்ட் கீத் வாலஸ், ஹெர்பெர்ட்பென்சன்எழுதிய கட்டுரைகள்சான்று.
தவிர ஒரு டஜனுக்கு மேற்பட்ட வைத்திய நிபுணர்களும், மேதைகளும் இதைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டுக் கட்டுரைகள் வெளியிட்டிருக்கிறார்கள்.
இதை யெல்லாவற்றையும் விட சுவாரசியமானது, ஆயிரக் கணக்கான டி.எம். அன்பர்களை நேரில் பேட்டி கண்டு, ஜான் ராபின்ஸ், டேவிட் ஃபிஷர் என்ற இரண்டு அமெரிக்கப் பத்திரிகையாளர்கள் எழுதியிருக்கும் Tranquility without Pills என்ற புத்தகம்.
மாணவர்கள் (எல்.எஸ்.டி. உபயோகிப்பவர்கள், உபயோகிக்காதவர்கள்) பணிபுரியும் பெண்கள், வீட்டிலேயே இருக்கும் அம்மாக்கள், எக்ஸிக்யூடிவ்கள், டாக்டர்கள்என்று யாரையும் விட்டு வைக்கவில்லை இவர்கள்.
டி. எம். சுத்தக் கட்டுக் கதையாய் இருக்குமோ என்று ஆராயப் புகுந்த இந்த இரண்டு எழுத்தாளர்களும், கடைசியில்—
தாங்களே ஆழ்நிலை தியானம் செய்பவர்களாக மாறிவிட்டார்கள்!
நான் எப்படி?
அதிகாலை இருபது நிமிஷமும், மாலை இருபது நிமிஷமும் டி. எம். செய்கிறேன். நிச்சயம் வீண் இல்லை என்று மட்டும் இப்போதைக்குச் சொல்லுவேன்!

-சாருகேசி

தியானப்பயிற்சி, புகைப்படம்: சுபா

**நவீன்**

பம்பாய் எனக்குப் பிடித்திருந்தது. என் தொழிலுக்குச் சாதகமாயிருந்தது.

லஸ்ஸியில் நீச்சலடித்துவிட்டுக் கடியாரத்தைப் பார்த்தேன். ஆறு - ஏழு. எதிரில் பரப்பியிருந்த சமாச்சாரங்களைக் கபளீகரம் பண்ணிக் கொண்டிருந்தான்—பிரதாப். என் முகக்கேள்வியைப் புரிந்துகொண்டானு?

''அந்த ஆள் சரியா ஆறு மணிக்கெல்லாம் வந்திடறேன்னு சொன்னுன். வந்திடுவான் மதன்!''

''மடையா!'' நான் கோபமாகத் திட்டினேன். என் குறுந்தாடியைத் தடவினேன்.

''சாரி நவீன். இரண்டு வருஷம் ஆகியும் உன் டில்லி பேரை மறக்க முடியலே.''

''மற.''

''இதோ வந்திட்டார் நவீன்!''—பிரதாப்.

திரும்பினேன். பார்த்தேன்.

புது சிவப்பு மேனி. சற்று வளர்த்தி. சதுர முகம். மீசையைத் துறந்திருந்தது. கண்களில் சில ச. மீட்டருக்குச சோகம். வயது: நாற்பதிலிருந்து முப்பதுக்குள் இருக்கலாம்.

பெயர்?

**தினேஷ்**

''என் பெயர் தினேஷ்.''

நான் பக்கத்திலிருந்த சேரை எடுத்துப் போட்டு உட்கார்ந்தேன். என்னை அந்தக் குறுந்தாடி வாலிபன் அழகாகப் பார்த்து மெலிதாகப் புன்னகைத்தான்.

''சார், இவர்தான் நவீன். நேரடியாக நீங்களே பேசிக்கங்க. எனக்கு ரீட்டா இட்டக் கொஞ்சம் வேலை இருக்கு. நான் வர்றேன்'' அறிமுகப்படுத்தி விட்டு பிரதாப் மறைந்தான்.

''பிரதாப், உங்களைப் பத்திநிறையச் சொன்னுன்'' — நான்.

அவன் அழகாக விஷயத்துக்கு வந்தான். ''உங்களுக்கு நான் என்ன செய்யணும்?''




''வந்து....'' நான் தயங்கினேன்.

''பயப்படாமச் சொல்லுங்க. இங்கே பக்ஸ் எதுவும் கிடையாது. விஷயம் நம்ம இரண்டுபேரையும் விட்டுத் தாண்டாது.''

நான் சுற்றும்முற்றும்பார்த்தேன். நெருங்கி உட்கார்ந்தேன். ''வந்து... ஒரு கொலை செய்யணும்'' என்றேன்.

அவன் சாதாரணமாகக் கேட்டான்: ''ஒன்னுதானு?''

''ஆமாம்.''

''யாரை?''

''என் மனைவியை!''

அவன் சற்று அதிர்ந்தான். ''மனைவியையா?''

''ஆமாம். என் மனைவியைத்தான்!''

பேரர் பவ்வியமாக வந்து நின்றான்.

''இரண்டு பரோட்டா.''

பேரர் மறைந்தான்.

''மனைவியைக் கொல்ற அளவுக்கு அவள் என்ன உங்களுக்குச் செஞ்சிட்டா?''

''துரோகம்!''

''வாட்?''

''சொல்றேன் மிஸ்டர் நவீன். நான் எத்தனையோ லட்சத்துக்கு அதிபதி. தற்செயலாக டில்லியிலே என்னுடைய நண்பனுடைய கம்பெனியிலே அவளைப் பார்த்தேன். அவளைப் பற்றி எனக்கு ஒன்னும் தெரியாது. இருந்தாலும் அவளை நான் குலம், கோத்திரம் பாராமல் கட்டிக்கிட்டதுக்குக் காரணம் அவளோட அழகுதான்! அதுபோல சமுதாயத்திலே மூன்றுவது தட்டிலே இருந்த அவள் எல்லாவற்றையும் உதறிவிட்டு கல்யாணம் செய்துகிட்டதுக்கு காரணம் என்னுடை பணம்தான்! கல்யாணம் ஆன கொஞ்ச நாள் வரைக்கும் எனக்காகவே வாழ்ந்தாள். ஒரு நாள் என் கம்பெனி மானேஜர் வீட்டுக்கு வந்தான். அதிலேயிருந்து...'' என் கண்கள் சோர்வாக மாறின.

அவன் கையை உயர்த்தி நிறுத்தச் சொன்னுன். ''தெரியுது மிஸ்டர். தொடர வேண்டாம். சட்டுன்னு மனசைத் திருப்பிக்கிறது இந்தப் பெண்களுக்கே வந்த கலை!'' அவன் ஓங்கி மேசை மீது ஆத்திரக் குத்து விட்டான். நான் ஒருவித பயத்துடன் அவனைப் பார்த்தேன்.

''நவீன் உணர்ச்சி வசப்படாதீங்க! என் கதையைக் கேட்ட உங்களுக்கே இவ்வளவு ஆத்திரம் வரும்போது எனக்கு எப்படி இருக்கும்?'' என்றேன்.

''ஹாரிபிள்!''

''ஆமாம். இந்த விஷயத்தை முடிக்க எவ்வளவு ஃபீஸ்?''

''வேண்டாம்.''

''வேண்டாமா?'' நான் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

''வேண்டாம். துரோகம் செய்யற பெண்களை ஒழிக்க நான் எதுவும் வாங்கறது இல்லே!''

''ஏன்?''

புருவங்களை உயர்த்தி என்னைப் பார்த்தான். சிரித்தான்.

# தயவு செய்து என் மீனஜனயக் கொல்லுங்கள்!

விஜுதா

**மதன்**

டில்லி.

பகத்சிங் சாலையில் இருக்கும் 'எமரால்ட் ஏஜென்ஸிஸ்' நிறுவனத்தின் பதிமூன்றாவது யு. டி. ஸி. நான். வருமானம் போதுமான தாகவே இருந்தது. தீபிகாவைச் சந்திக்கும் வரை!

தீபிகா?

என் காதலி. என்னுடன் கே. ஜே. ஐஸ் கிரீம் சாப்பிட்டவள். அசோகாவின் புல்வெளியில் என்னுடன் புரண்டவள். டிலக்ஸின் பாக்ஸில் என்னுடன் படம் பார்த்தவள். நான் கம்பெனி விஷயமாக கல்கத்தா போயிருந்தபோது, திடுமென்று வேறு ஒருவனுக்குக் கழுத்தை நீட்டிக் காணாமல் போனவள்.

சட்டையைக் கிழித்துக் கொள்ளாத குறையாக நான் டில்லிமாநகரின் தெருக்களில் பவனி வரும்போது, சட்டென்று என் கம்பெனி விழித்துக் கொண்டது. தீபிகாவின் ஆடம்பரச் செலவுக்காகக் கம்பெனியில் நான் செய்திருந்த தில்லுமுல்லுகள் அப்போதுதான் தெரிய வேண்டுமா?

அப்புறம்?

மெட்ரோபாலிடன் — மாஜிஸ்ட்ரேட் — வக்கீல் — தீர்ப்பு — ஆறு மாதம் — திகார் சிறைச்சாலை.

வெளியே வந்த எனக்கு வேலை கொடுக்க யார் மாலையுடன் காத்திருக்கிறார்கள்? அலைந்ததுதான் மிச்சம். என் மனம் எரிந்தது. என் நிலைக்குக் காரணம்? தீபிகா! தீபிகா! தீபிகா!

பிழைக்க டில்லியை விட்டு பம்பாய் வந்தேன். வேலை வேகில் கிடைப்பதாய்த் தெரியவில்லை. நானே வேலையை உண்டாக்கிக் கொண்டேன். பேரை மாற்றிக் கொண்டேன். நவீன்! குறுந்தாடி வைத்துக்கொண்டேன். 'பிரைவேட் டிடெக்டிவ்' என்று பித்தளையில் போர்டு மாட்டிக் கொண்டு, மௌலானா சௌகத் அலி சாலையில் குடியேறினேன். உண்மையான தொழில்? தினேஷ் போன்றவர்களுக்கு உதவுவது.

டாக்டர்: ஆறு மாசத்துக்கு முன்னே அட்மிட் பண்ணதிலே இவரைப் பார்க்க தினமும் வந்த சொந்தக்காரங்க இப்ப வருவதில்லையே. ஏன்?

நண்பர்: இவரோட சொத்து இருந்த எல்லாம் உங்க ட்ரீட்மெண்டிற்கே சரியாப்போச்சு. இனி ஏன் வரணும்?

—அ. குமார்



**தினேஷ்**

'ஏன்?' என்ற என் கேள்விக்குப் பதில் சொல்லாமல் நவீன் சிரித்தது எனக்கு வித்தியாசமாகப் பட்டது.

வெகு நேரத்துக்குப் பிறகு நிகழ் காலத்துக்கு வந்தவனைப் போல நவீன், ''ஸாரி தினேஷ், என் நினைவு பின்னுக்குப் போயிடுச்சு. ஆமாம் என்ன கேட்டீங்க?'' என்று கேட்டான்.

''என் மனைவியைக் கொல்லச் சன்மானமாகப் பணம் ஏதும் வாங்க மாட்டேன்'னு சொன்னீங்க. நான் 'ஏன்?'ன்னு கேட்டேன்.'' என்றேன்.

''ரொம்ப சிம்பிள். உங்களை ஒரு பெண் பாதிச்சது போல என்னையும் ஒரு பெண் பாதிச்சிருக்கா!''

''புரியுது நவீன்!''

''ஓ.கே. விவரத்தைச் சொல்லுங்க'' என்றான்.

''பெங்களூர். ஜெயநகர். இரண்டாவது குறுக்குத் தெரு. ஏழு. பச்சை பங்களா. கொஞ்சம் தள்ளி உள்ளே இருக்கும். வீட்டிலே என் மனைவி மட்டும்தான் இருப்பாள். ராத்திரியில் வேலைக்காரங்க கூட இருக்க மாட்டாங்க. அவளை வேண்டுமென்பதற்காக நான் கம்பெனி விஷயமாக நாகபுரி புறப்படப்போறேன். அங்கே நான் ஐந்து நாட்கள் இருப்பேன். விஷ் யு ஆல் த பெஸ்ட்! குட் நைட்!'' நான் கீழே இறங்கி பம்பாய் ஜனக் கும்பலில் அந்தமனமானேன்.

**நவீன்**

மறுநாளே பம்பாயை விட்டு கன்கார்டாகப் பெங்களூர் புறப்பட்டேன். அந்த ஜெயநகர் பச்சைப் பங்களாவைக் கண்டுபிடிப்பது அப்படி யொன்றும் சிரமமாகத் தெரியவில்லை. அதை நான் முற்றுகையிடும் போது மணி பதினொன்று. இருளில் அது மூழ்கியிருந்தது.

பஸ்ஸரை அழுத்தினேன். உள்ளே நடமாடும் சப்தம். கதவு திறக்கப்பட்டது. ஒரு பெண்! இவள்தான் தினேஷின் மனைவியா? அவள் என்னைப் பார்த்து ஒரு மாதிரியாகச் சிரித்தாள். ராட்சசி! முன் பின் அறிமுகமில்லாத என்னைப் பார்த்து இளிக்கிறாளே! தினேஷ் இவளைப் பற்றிச் சொன்னது சரியாகத்தான் இருக்கும்போல் இருக்கு? எனக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

''உள்ளே வாங்க.'' அழைத்தாள்.

அவள் சுவாதீனமாகக் கூப்பிட்டது என்னுள் உறுத்தியது. நாடகமாடுகிறாளா?

''கொஞ்சம் இருங்க. ட்ரிங்ஸ் கொண்டு வர்றேன்.'' அவள் உள்ளே மறைய நான் உஷாரானேன். கணவனின் இஷ்டத்தைத் தெரிந்து கொண்டு என்னை ஒழிக்க ஏதாவது செய்கிறாளோ?

நான் பாக்கெட்டில் கையை விட்டேன்.

கருப்பான ஒரு திரவத் ததும்பலுடன் அவன் வர, என் 455 வெப்பே ஸ்காட் ஸைலன்ஸர் ஆசியுடன் சீற, குண்டு அவளின் இடது இதய ஆரிக்கிளைச் சிதற அடிக்க சிகப்பு நிறத்தில் இரத்தம் தெறிக்க அவள் என்னைப் பார்த்துக் கொண்டே சரிந்தாள்.

''ஒழியட்டும் சனியன்!''

விருட்டென்று திரும்பினேன். விசாலமான ஹால். தலையை உயர்த்தினேன். 'என்ன?'

என் இதயம் நின்று துடித்தது. தீபிகா! பட்டமாக தீபிகா! இவள் எப்படி இங்கு வந்தாள்? மறு பக்கம் திரும்பினேன். தீபிகா, தினேஷுடன் மணக் கோலத்தில் நின்றிருந்தாள். அப்படி யென்றால் தினேஷின் மனைவி தீபிகாவா? என் காதலியைத் தினேஷ்தான் கொத்திக் கொண்டு போனதா? இவளை ஒழித்துக்கட்டத்தான் என்னை அனுப்பினானா?

'என்வீட்டில் என்மனைவிதவிரவேறு யாரும் இருக்க மாட்டார்கள்' என்று தினேஷ் சொன்னானே? அப்படி யென்றால் இவள் யார்?

**விதுபாலா**

பம்பாய்.

மௌலானா சௌகத் அலி சாலையில் இருக்கும் என் அத்தை வீட்டிலிருந்து பிரஸிடென்ஸி கல்லூரிக்கு எட்டு கி.மீ. இருக்குமா? இருக்கும். காரில் செல்லும்போது அசடு வழிய கும்பல் கும்பலாக நிற்கும் வாலிபக் கூட்டங்களைப் பார்க்கும்போது எனக்குச்சிரிப்பாக இருக்கும். அலுத்துப் போனபோது தான் அவரைப் பார்த்தேன்.

எங்கே?

என் அத்தை வீட்டுக்கு எதிரில்தான். தனிப்பட்ட முறையில் 'துப்பறியும் ஏஜென்ஸி' வைத்திருந்தார். பிஸி போலிருக்கு. எப்போது பார்த்தாலும் அவர் ஆபீஸில் ஜனக் கூட்டம். அவர் பேர்கூட என்னவோ? ஆங்... ஞாபகம் வந்திடுச்சி. நவீன்! தற்செயலாக அவரைப் பார்த்தேன். அவர் என்னைக் கண்டுகொண்டதாகவே தெரியவில்லை. அதுவே என்னை அவரிடம் ஈடுபாடு கொள்ளச் செய்தது. தொடர்ந்து பார்த்தேன்.

இன்றோடு பரீட்சை முடிந்துவிடும். படிப்பும் அவ்வளவுதான். அப்புறம் பெங்களூர் போய் அண்ணனிடம் இந்த விஷயத்தை உடைக்க வேண்டும். கேட்டதும் அப்படியே அசந்து போய்விடுவார்.

'அப்பாடா, இப்பவாவது கல்யாணத்துக்குச் சம்மதித்தாயே? ரொம்ப சந்தோஷம் விது.'

அத்தையிடம் சொல்லிக் கொண்டு பெங்களூர் புறப்பட்டேன். ஜெயநகரில் இருக்கும் என் அண்ணன் வீட்டை அடைந்தபோது, என் அண்ணி யாரோ ஒரு வாலிபனுடன் பேசிக் கொண்டிருந்தாள். என்னைப் பார்த்ததும் அவன் வெட்டிக் கொண்டு புறப்பட்டான். அவள் நடத்தை...எனக்குக் கசந்தது.

''வா, விது. இப்பத்தான் வர்றியா?''

''ஆமாம், அண்ணன் எங்கே?''




''நேத்துத்தான் உன் அண்ணன் பிஸினெஸ் விஷயமாக நாகபுரி புறப்பட்டுப் போனார். திரும்பி வர நாலைஞ்சு நாளாகும்.''

அண்ணிக்கு இருப்புக் கொள்ளவில்லை.

''விது, நீ வீட்டைப் பார்த்துக்க. நான் ஒரு பார்ட்டிக்குப் போக வேண்டியிருக்கு. வரக் கொஞ்ச நேரமாகும்.''

போய்விட்டாள். பாவம் என் அண்ணன்!

மனத்துக்குள் நான் பலமாகத் திட்டமிட்டேன். நாகபுரியிலிருந்து அண்ணன் திரும்பினதும் என் கல்யாண விஷயத்தையும் அந்த நவீனை நான் விரும்பறதையும் சொல்ல வேண்டும். அண்ணன் சீக்கிரம் வந்தால் நன்றாக இருக்கும்.

கடியாரத்தைப் பார்த்தேன். மணி பதினொன்று. அண்ணி இன்னும் வந்தபாட்டைக் காணோம். படுக்கப் போகும்போது பஸ்ஸர் கூப்பிட்டது. 'அண்ணி வந்துட்டாங்க போல இருக்கு?' ஓடிச் சென்று கதவைத் திறந்தேன்.

நான் ஆச்சரியத்தில் வெலவெலத்துப்போய் விட்டேன். பின்னே இருக்காதா? கதவுக்கு அப்பால் நவீன் நின்று கொண்டிருந்தார். என்னுள் சந்தேக மின்னல் பாய்ந்தது. நான் மெல்லச் சிரித்தேன். இவர் எதற்கு இங்கு வந்தார்? அதுவும் இந்த நேரத்தில்? ஒரு சமயம் அண்ணனைப் பார்க்க வந்திருப்பாரோ? எனக்கு ஒன்றும் புரியவில்லை.

''உள்ளே வாங்க'' என்றேன்.

வந்தார். அவரின் பார்வை விநோதமாக இருந்தது.

''கொஞ்சம் இருங்க. டிரிங்ஸ் கொண்டு வர்றேன்'' நான் உள்ளே போய் ஃப்ரிஜ்ஜை திறந்து கோலாவுடன் திரும்பினேன்.

எதிரே—

கையில் துப்பாக்கியுடன் நவீன்!

'ஐ லவ் யூ நவீன்!' என்று நான் வாயைத் திறப்பதற்குள், அவர் கையிலிருந்த துப்பாக்கி வெடித்தது. என் மார்பு துளைக்கப்பட, சிவப்பு நிறத்தில் இரத்தம் தெறிக்க, அவரை வெறித்துப் பார்த்துக் கொண்டே சரிந்தேன்.




# 'அலியம் ஸெபா' சாம்பார் சாப்பிட்டிருக்கிறீர்களா?

**கலந்து கொண்டவர்கள்**

1. ஹேமா
2. கிறிஸ்டினு வசந்தஷீலா
   (லேடி டோக் கல்லூரி)

1. சி. எம். மோகன்
2. எம். மொகமது ரசூல்
   (எம். எஸ். எஸ். வக்ப் போர்டு கல்லூரி)

**இந்த முறை க்விஸ் நடந்த இடம்: மதுரை. டாஸில் வெற்றி பெற்ற மாணவர்கள் மதுரை சம்பந்தப்பட்ட கேள்வியுடன் நிகழ்ச்சியை ஆரம்பித்தார்கள்.**

'வெள்ளியம்பலம்' என்ற இடம் எங்கு இருக்கிறது? அங்கு நடனமாடியவர் யார்?

பார்வையாளர் பகுதியிலிருந்து பெண்களுக்கு 'டிப்ஸ்'கள் வந்ததைத் தடுத்து நிறுத்த நேர்ந்தது. பெண்களுக்குப் பதில் தெரியவில்லை.

விடை: வெள்ளிய்ம்பலம் என்ற இடம் மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் சொக்கநாதர் சன்னிதிக்கு அருகில் இருக்கிறது. அங்கு நடனமாடியவர் சிவபெருமான்.

மாணவர்கள் கிரிக்கெட்டில் விஷயம் தெரிந்தவர்களாக இருப்பார்கள் என்று நினைத்து மாணவிகள் கேட்டது:

கிரிக்கெட் ஸ்டம்பின் உயரம் என்ன? முழித்தார்கள் மாணவர்கள்.

விடை: 28 அங்குலம்.

மாணவர்கள் I.C.B.M. என்றால் என்ன? மாணவிகளுக்குத் தெரியவில்லை.

விடை: Inter Continental Ballistic Missle.

அடுத்த கேள்வி கேட்கும் வாய்ப்பு பெண்களுக்கு. சமையல், சாப்பாட்டுக்கும் பெண்களுக்கும் உள்ள தொடர்பு தெரிந்த விஷயம் தானே?

வெங்காயத்துக்குத்தாவர இயல்படிபெயர் என்ன?

'எங்க வீட்டில இன்னிக்கு வெங்காய சாம்பார்' – பார்வையாளர் பகுதியிலிருந்து குரல். மாணவர்கள் சரியான விடையைச் சொல்லி, தங்களுக்கும் சமையல், சாப்பாட்டின் பேரில் மிகுந்த மோகம் உண்டு என்பதை நிரூபித்தார்கள்.

விடை: அலியம் ஸெபா (Allium Cepa)

மாணவர்கள்: கிராபாலஜி (Graphology) என்றால் என்ன?

மாணவிகளுக்குத் தெரியவில்லை.

விடை: கையெழுத்துக்களைப் பற்றி நடத்தும் ஆராய்ச்சியைக் குறிக்கும் சொல்.

எங்கும் 'சில்க்' எதிலும் 'சில்க்' என்ற இந்த நேரத்தில் மாறுபட்ட கேள்வியைக் கேட்டனர் மாணவிகள்.

தமிழ் நாட்டில் முதலில் கதர் பிரசாரத்தைத் துவக்கியவர் யார்?

விடையையும் மாணவிகளே சொல்ல வேண்டி வந்தது.

விடை: பெரியார் ஈ. வெ. ரா.

அடுத்து மாணவிகளை 'நண்டு பிடி' போட்டனர் மாணவர்கள்.

நண்டு இடம் விட்டு இடம் நகருவதன் முக்கியத்துவம் என்ன?

மாணவிகள் இந்த 'நண்டு பிடி' யுங்களிடம் நடக்காது என்று சரியான விடையைக் கூறினார்கள்.

விடை: பக்கவாட்டில்தான் நகரும்.

மாணவிகள்: Palace on Wheels என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அதைப் பற்றிச் சொல்ல முடியுமா?

இரண்டு நிமிடம் யோசித்தும் மாணவர்களால் பதில் சொல்ல முடியாமல் போகவே மாணவிகளே பதில் சொல்ல வேண்டியதாயிற்று.

விடை: ராஜஸ்தான் மாநில சுற்றுலா வாரியமும், இந்திய ரயில்வேயும் இணைந்து, ராஜஸ்தான் மாநிலத்திலும் மற்றும் உத்தரப் பிரதேசத்திலும் உள்ள சுற்றுலா இடங்களைக் காண்பிக்க 12 பெட்டிகள் கொண்ட ரயில் தொடர் ஒன்றைச் செலுத்துகின்றனர். இந்த ரயிலில் அரண்மனையில் உள்ளது போன்ற வசதிகள் இருக்கின்றன. எனவே இந்த ரயிலை Palace on Whells என்கிறார்கள்.

இன்னொரு ரயில் கேள்வி போட்டார்கள் மாணவர்கள்.

ராஜதானி எக்ஸ்பிரஸ் எங்கிருந்து எங்கு செல்கிறது?

டக்கெனப் பதில் சொன்னார்கள் மாணவிகள்.

விடை: டெல்லியிலிருந்து பம்பாய்க்கும் கல்கத்தாவுக்கும் செல்கிறது.

இப்போது மாணவிகளுக்குக் கேள்வி கேட்க சான்ஸ்.

தமிழ் நாட்டில் எத்தனை மாநகராட்சிகள் உள்ளன. மேயரும் துணை மேயரும் உள்ள மாநகராட்சி எது?

மேயரும் துணை மேயரும் உள்ள மாநகராட்சி மதுரை என்று சரியாகப் பதில் சொன்ன மாணவர்களுக்குத் தமிழ் நாட்டில் எத்தனை மாநகராட்சிகள் என்று தெரியவில்லை.

விடை: மூன்று. 1. சென்னை; 2. மதுரை; 3. கோவை.

மாணவர்களின் கேள்வி 'ரத்தத்துக்கு'த் தாவிற்று. 'மனிதன் உடம்பில் சராசரி எவ்வளவு ரத்தம் இருக்கும்?

மாணவிகள் யோசித்து விடையைச் சொல்லி விட்டார்கள்.

விடை: ஒவ்வொரு மனிதனின் எடையிலும் சராசரி 7 சதம் ரத்தம் அவனது உடலில் இருக்கும்.

கடைசியாகக் கேள்வி கேட்கும் வாய்ப்பு மாணவிகளுக்குக் கிடைத்தது.

ஊசிகளைக் கொண்டு நோய்களைக் குணப்படுத்தும் சிகிச்சையின் பெயர் என்ன? எந்த நாட்டிலிருந்து இந்த முறை வந்தது?

மாணவர்களுக்குத் தெரியவில்லை.

விடை: இந்தச் சிகிச்சையின் பெயர் 'அக்குபஞ்சர் (Acupuncture) இந்த முறை சீனாவில் இருந்து வந்தது.

நிறையக் கேள்விகளுக்குப் பதில் சொன்ன லேடி டோக் கல்லூரி மாணவிகளுக்குப் பரிசுப் பணமாக 30 ரூபாயும், புத்தகங்களும், நிலக்கோட்டைத் தொகுதி சட்ட மன்ற உறுப்பினரான திருமதி பொன்னம்மாள் அவர்களால் 'கல்கி'யின் சார்பில் வழங்கப்பட்டது. மாணவர்களுக்கும் ஆறுதல் பரிசாகப் புத்தகங்கள் வழங்கப்பட்டன.

நன்றி: நிகழ்ச்சி நடத்த ஏற்பாடு செய்து இடமும் கொடுத்து உதவிய திரு ப. நெடுமாறன் எம். எல். ஏ. அவர்களுக்கு.

தொகுப்பு: பிரியன், சந்திரமௌலி

படங்கள்: வி. மகேஷ்



○ சட்டமன்ற உறுப்பினர் திருமதி பொன்னம்மாள் பரிசு வழங்குகிறார்



⌘ கோயிலின் முன்னிருந்து பார்க்கும்போது ஏகப்பட்ட படிகள்...

கவிஞர்கள் கோழிக்கோடு நகரத்தைப் பூந்துறை என்றும், அங்கிருந்து அரசாட்சி செய்த ஸாமூத்திரியை பூந்துறைக் கோன் என்றும் அழைத்துக்கௌரவித்திருக்கிறார்கள். கடற்கரையாயிற்றே, நெய்தல் நிலத்தைப் பூந்துறை என்று கூறுவது எவ்வாறு பொருந்தும் என்று தோன்றலாம்

திருவளைய நாடு காவு என்ற இடத்துக்குச் சென்றபோதுதான் இந்தப் பெயர்ப் பொருத்தம் விளங்கியது. அங்கு 'திருவளையநாடுகாவு பகவதி' என்ற அம்பிகையின் கோயில் இருக்கிறது என்று கேள்விப்பட்ட போது சென்று பார்க்க மனத்தில் ஆர்வம் எழுந்தது. காவு என்றால் சோலை என்பதை அறிந்திருந்தபடியால் ஊருக்குள் ஒரு காவாவது? என்று எண்ணிக் கொண்டே பகவதியின் தரிசனத்துக்குக் கிளம்பினேன்.

கோவிலின் முன்னிருந்து பார்க்கும்போது ஏகப்பட்ட படிகள். அப்படி யொன்றும் பெரிய சோலையாகத் தெரியவில்லை. படி ஏறிக்கோபுர வாசலில் நின்று பார்த்தால் சில மரங்கள் தென்பட்டன, பிறகு உள்ளே சென்று வலதுபுறக் கோபுர வாயிலுக்குச் சென்றால் பசேலென்று மரங்களும், புஷ்பங்களும், கிளைகளில் விளையாடும் கிள்ளைகளும் பரவசமூட்டுகின்றன. ஒரு மஞ்சள் நிறப் பறவை பளபளக்கும் கறுப்புத் தலையுடன் ஒரு கிளையில் ஊஞ்சலாடுகிறது. தெய்வத்தை வழிபடத்தான் எத்தனை பொருத்தமாக இடம் தேர்ந்தெடுத்தார்கள்! கடுங் கோடையிலும் சோலையின் அழகு மனம் கவருகிறது. மழைக்குப் பின் வந்தால் இன்னும் பசுமையாக இருக்கும்.

இந்தப் பகவதி கோவிலுக்குக் கொடி மரம் இல்லாமலிருந்ததாம். சமீப காலத்தில் ஒரு பிரமுகர் அஷ்டதிக் பாலர்களின் சிறிய பிம்பங்களுடன் கூடிய துவஜஸ்தம்பத்தை நாட்டி வேதாளக் கொடியை ஏற்றி அம்பிகைக்கு தொண்டு செய்ததாகக் கூறினார்கள். அம்பிகையின் வாகனம் வேதாளம். ஆகவே இந்தத் த்வஜப் பிரதிஷ்டை இரவு 2 மணிக்கு நடந்ததாம்.

கேரள நாட்டுக் கோவில்கள் எல்லாமே எளிய தோற்றத்துடன் காணப்படுகின்றன. கோவிலில் உறையும் தெய்வம்தான் பிரதானம். வழிபாடுதான் முக்கியம். உள்ளமும் உடலும் பரிசுத்தமாக இருப்பதுதான் அவசியம். நாம் வழிபாட்டுக்காக எந்தப் பொருளையும் எடுத்துச் செல்ல வேண்டியதில்லை. அன்பும், ஆர்வமும் இன்புருகு சிந்தையும் இருந்தாலே போதும்.

ஸ்ரீபுரத்தை வலம்வந்துமரத்தினால் கடைந்தெடுத்துச் செய்த பலகணி வழியாக பகவதியைத் தரிசனம் செய்கிறோம். அங்கே ஒரு தேவிக்குப் பதில் பல சிலை வடிவங்கள் அமர்ந்த கோலத்தில் வீற்றிருப்பதைக் காண்கிறோம். ஒரே சமயத்தில் இத்தனை மாதரையும் பார்க்க முடியாது; வலது புறமாக நடந்து கொண்டேதான் யாவரையும் தரிசிக்க முடியும்.

பல கோவில்களில் பிராகாரத்தில் ஒன்பது கற்கள் இருப்பதைக் காணலாம். ஏழு கற்கள் வரிசையாகவும், இரண்டு சற்று முன்னாலும் இருக்கும். இவை நவக்ரகங்களைக் குறிப்பதாக நினைத்து வந்தேன். திருவளைநாடு காவுக்குச் சென்ற போது

# திருவளையநாட்டின் திரு

# தெய்வ தரிசனம்

என்னை அங்கே அழைத்துச் சென்ற ஸ்ரீ எஸ். எச். கே. சர்மா அவர்கள் ஓர் அரிய விஷயத்தைக் கூறினார். இது கோள்களைக் குறிப்பதல்ல என்றும் ஸப்த மாதரையும் எதிரும் புதிருமாகப் பைரவரும் கணபதியும் வீற்றிருப்பதையும் குறிக்குமென்று கூறினார்.

சிவலிங்கம் கோயிலின் நடு நாயகமாக இருக்கிறது. பூஜை செய்யும் நம்பூதிரி கரண்டி விளக்கைத் தூண்டி விட்டு ஒவ்வொரு தேவியாக நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார். முதலில் அன்னை பகவதி. மேலே ஸ்வர்ண ஸ்ரீ சக்கரம். புஷ்பங்களைச் சற்றுத் தள்ளி விளக்கை அருகில் பிடிக்கிறார். நன்றாகத் தரிசனம் செய்ய முடிகிறது. அடுத்ததாக சாமுண்டி தேவி. "ஸப்த மாதரில் சாமுண்டி ஒருவரா?" என்ற கேள்வி மனத்தில் தோன்றும்போதே "தாரகனை வதம் செய்து வெற்றி கொண்டதால் பிரியத்தோடு அருகில் வைத்துக் கொண்டிருக்கிறாள்" என்று கூறினார். அடுத்து பிரும்மாணி மாஹேச்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, இந்திராணி எல்லாரும் வீற்றிருக்கிறார்கள். பாதங்களில் மஞ்சள் பொடியால் அர்ச்சனை செய்யப்பட்ட அடையாளம்.

"இதுதான் நாந்தகம் என்ற அம்பிகையின் வாள்." விளக்கின் ஒளியில் அரிவாளைப் போல் முனையில் வளைந்த வாள் தெரிகிறது. அதற்கு மாலை சாத்தப்பட்டிருக்கிறது. கருணையே வடிவமான அன்னைக்கு வாள் எதற்காக? ஆயுதங்கள் எதற்காக?

உலகம் என்பது இருளும் ஒளியும் சேர்ந்தது. மாயை அகன்றுவிட்டால் பேரின்ப நெறிதான். தேவியின் ஆயுதங்கள் மாயையை அதன் பலனால் உண்டான அசுர சக்திகளை அடக்குவதன் சின்னம். அசுர சக்திகளை அடக்கி ஆள்வதற்காகவே கருணை வடிவமான அன்னை பயங்கர ரூபங்களை எடுத்துக் கொண்டு யுத்தம் செய்கிறாள்.

இந்தக் கோவிலுக்குத் திருவளைய நாடு என்று ஏன் பெயர் வந்தது என்பது ஒரு சுவையான கதை. கோழிக்கோட்டின் அரசராக இருந்த ஸாமுத்திரி வள்ளுவ நாட்டு மன்னனிடம் தோற்றார். மாங்காட்டு அச்சன் என்ற மந்திரி சிறந்த மதியூகி. அவருக்கு எதிரியுடைய வெற்றியின் ரகசியம் புரிந்து விட்டது. குலதெய்வத்தின் சக்தியே ஜெயத்தைக்கொடுக்கிறதுஎன்பதுதெரிந்தது. அவருடைய சொற்படி ஸாமுத்திரி மலப்புரத்தில் உள்ள திருமாதான் குன்று பகவதியின் கோவிலுக்குச் சென்று கடுமையான நியமத்துடன் விரதம் இருந்தார். அம்பாள் தோன்றி "என்ன வேண்டும்?" என்று கேட்டதும் "என்னுடைய ஊருக்கு வர வேண்டும்" என்று வரம் கேட்டார். "திரும்பிப் பார்க்கக் கூடாது" என்று கூறிவிட்டு அன்னை பின்தொடர்ந்து வந்தாள். ஸாமுத்திரியின் செவிகள் என்ன பாக்கியம் செய்தனவோ? அம்பிகையின் பாதச் சிலம்பொலி ஸாமகானமாக ஒலித்துக் கொண்டே பின் தொடர்ந்தது. ஒரு இடத்தில் வயலில் இறங்கியபோது சதங்கையில் ஒலி கேட்கவில்லை. திரும்பிவிட்டார் அரசர். பகவதி தரையில் அமர்ந்து விட்டாள். அந்தப் புனிதத் தலத்துக்கு 'தரைக் கல்' என்று பெயர். பட்ட சிரமம், செய்த தவம் வீணாகி விட்டதே என்று மனம் நொந்த ஸாமுத்திரி மறுபடியும் பிரார்த்தனை செய்தார். "என் வளையை எறிகிறேன். அது விழும் இடத்தில் என்னைப் பிரதிஷ்டை செய்" என்ற வாக்கு கேட்டது. சக்கராயுதத்தைப் போல் பிரகாசத்துடன் நவமணிகள் இழைத்த பகவதியின் வளை உருண்டது. ஏழு நாட்கள் ஒரே இடத்தில் சுழன்று வந்ததால் அந்த இடம் 'ஆழ்ச வட்டம்' என்று கூறப்படுகிறது. அங்கிருந்து ஆதவனின் ஆழி போல் உருண்டு வளையனூர் காவில் வந்து விழுந்தது தேவியின் கைவளை.

உடனே கோவில் கட்டப்பட்டது. திருமாதான் குன்று பகவதி திருவளையனாடு பக

—: ஆனந்தி :—

× சோலையிலிருந்து கோயில் தோற்றம்



வழியாக அருள்பாலித்து விட்டாள். ஆனாலும் அரசருக்கு அன்னை கோவிலில் இருக்கிறாளா என்று சற்று சந்தேகம். உள்ளே சிலம்புகளின் சிலுக்கும் வாளின் குலுக்கும் கேட்டது. ஆவலுடன் கதவைத் திறந்து விட்டார். தேவி கதவுக்குப் பின் ஒளிந்து கொண்டு விட்டாள். அன்னையின் பூப்போல் மென்மையான கரம், அருள் சொரியும் கரம், பயத்தை நீக்கும் கரம் மட்டிலும் அரசரின் கண்களுக்குத் தெரிந்தது. கையைப் பிடிக்க நினைத்தார். தேவியின் கரம் அவ்வளவு சுலபமாகக் கிடைத்து விடுமா? கை தென்பட்ட இடத்தில் கை கிடைக்கவில்லை. ஆயினும் அரசர் கையில் ஒரு வளை மட்டும் கிடைத்தது.

அரசர்கள் ராஜ்யாபிஷேகம் செய்து கொண்ட நாட்களில் அவர்கள் கோயிலுக்கு வரும்போது வாதில் கட்டில் என்ற நிலைப் படிக்கு அருகில் செப்புப் பட்டு விரித்து தேவியின் கர தரிசனமும் கைவளையும் கிடைத்த ஞாபகமாக தேவி தரிசனம் செய்விப்பது சம்பிரதாயமாக இருந்தது.

இந்தக் கோயிலில் தினமும் ஐந்து வேளை பூஜைகள் உண்டு. சீவேலி மிகவும் முக்கியம். காளி நாந்தகம் என்ற வாளையே தூக்கிக் கொண்டு செண்டை முழங்க வலம் வருகிறார்கள்.

கார்த்திகை முதல் தேதி தொடங்கி மார்கழி 11ந் தேதி முடியும் மண்டல பூஜை மிக விசேஷமானது. இரவு 8 மணிக்குக் களபூஜை தொடங்கும். தாமரை வடிவில் அஷ்ட தள பத்ம கோலம் வரைந்து, குங்குமம், மஞ்சள் பொடி, கரிப் பொடி, பச்சைப் பொடி, அரிசி மாவு இவற்றால் வண்ண வண்ணக் கோலம் போட்டு, தேவியை எதிரில் ஆவாஹனம் செய்து பாட்டுக்கள் பாடித் துதிப்பார்கள். இதைச் செய்வது கல்லாட்டுக் குருப்பு என்ற குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். கோபுர வாயிலை ஒட்டிய திண்ணையில் களம் எழுதும் இடம் சற்று மேடாக இருப்பதால் எழுதிய கோலம் தூரத்தில் கூட நன்றாகத் தெரியுமாம். களம் எழுதிய பொடி, மந்திர உச்சாடனங்களினாலும், சடங்குகளின் சக்தியாலும் தோத்திரங்களின் வன்மையாலும் காந்த சக்தியை அடைந்து விடுவதால் அதைத் திரட்டி வீட்டு நிலைப்படியில் முடிச்சாகக் கட்டிச் சொருகி வைத்தால் பயங்கள் நீங்கும், ரோகங்கள் போகும், பவ பய பாசங்கள் நீங்குவதன் அடையாளம் இது.

தை மாதத்தில் பள்ளி வேட்டை என்ற உற்சவம் நடத்துவார்களாம். இந்தச் சமயத்திலும் நாந்தகமே தேவியாகக் கருதப்பட்டு வழிபடப் பெறுகிறது. வாளைக் காட்டுக்குக் கொண்டு போய் இரவானதும் பாலிகை தெளித்து, வளர்ந்த கும்பங்களின் மேல் பட்டுத் தலையணை வைத்து, அதன் மீது வைத்து விடுவார்கள். அதன் பிறகு வாளை

---

## கோவையிலிருந்து சில கடிதங்கள்

# "எழுத்தாளரைப் புண்படுத்தும் எண்ணம் எங்களுக்கில்லை!"



● வேண்டுமென்றே கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத் துணை வேந்தரும், சம்பந்தப்பட்டவர்களும் எழுத்தாளர்களை அவமானப் படுத்தியது மாதிரி எழுதியது எனக்கு உடன்பாடில்லை.

மாணவர்களின் எண்ணம் ஒன்றே ஒன்று தான். எப்படிப்பட்ட இக்கட்டான கேள்விகளுக்கும் இவர்களால் பதில் சொல்ல முடிகிறதா? — என்று பார்க்கிற ஆசை.

இண்டலும், உற்சாகமும் துள்ளலும் கரை புரண்டு ஓடும்போது நாம் இதில் அடித்துக் கொண்டு போய்விடாமல் நீந்திக் கரை சேர்வதுதான் முக்கியம்.

கோவை விமலா ரமணி

● அன்று அந்தநிகழ்ச்சிக்குமுழுப்பொறுப்பை ஏற்று நடத்தி, அந்த நிகழ்ச்சி முடியும்வரை ஆனந்ததீர்த்தனுடன் நான் கூடவே இருந்தேன்.

மாணவ, மாணவிகளுக்கு எழுத்தாளர்களை வரவழைத்து, அவர்களை அவமதிக்க வேண்டும் என்பது எண்ணமே அல்ல.

அவரிடம் கேள்விகளைத் தரும்போது நான் சொன்னேன், ''மாணவர்கள் யாரும் ஆழமாகத் தங்களது கதைகளைப் படித்து இருக்க மாட்டார்கள். ஆகவே தங்களிடம் கேட்கும் கேள்விகள் எல்லாம் பொதுவாகவே இருக்கும். மேலும், அக்கேள்விகள் உங்களைப் பாதிப்பதாக இருந்தால், அவைகளுக்கு நீங்கள் பதில் சொல்ல வேண்டிய கட்டாயம் இல்லை. உங்களுக்கு எது பிடிக்கிறதோ, அதனை மட்டும் சொன்னால் போதும்'' என்று சொல்லி, சுமார் 40 முதல் 60 கேள்விகளை அவரிடம் நான் கொடுத்தேன். இதனை ஹேமா ஆனந்த தீர்த்தன் மறுக்கட்டும் பார்க்கலாம்!

ஒரு சமயம் அவருக்குத் தரப்பட்ட கேள்விகள் உண்மையிலேயே பாதித்து இருந்தால், அவைகளுக்கு மேடையில் பதில் தராமல் இருந்திருக்கலாம், பதிலும் சொல்லி

தரைக்கல் என்ற இடத்துக்கு எடுத்துக் கொண்டு போய் வழிபட்டுப் பின்னர் மாங்காவு என்ற இடத்திலுள்ள குளத்தில் நீராட்டித் திரும்புவார்கள்.

'பல வருடங்களுக்கு ஒரு முறை சாந் தாட்டம் செய்வோம்' என்று நம்பூதிரி கூறவே அதில் என்ன விசேஷம் என்று கேட்டேன்.

''இதெல்லாம் மர விக்ரஹம். அதனால் அவற்றுக்குக் கேடு வராமல் இருக்க சாந் தாட்டுச் செய்ய வேண்டும்'' என்றார். தேக்கு மரப் பிசினைக் காய்ச்சி பகவதிக் கும் மற்ற தேவிமார்களுக்கும் சுடச் சுட அபிஷேகம் செய்வார்களாம். மரம் என்ற தும் சற்றுத் திகைத்துப் போனேன். ஆயிரம் வருடங்களாக மர விக்ரஹங்கள் எவ்வாறு அப்படியே இருக்கின்றனவென்று அதிசய மாக இருக்கிறது.

சக்தி உபாஸகர்கள் அம்பிகையை முழு முதற் தெய்வம் என்று நம்பிச் சரணமடை கிறார்கள். ஆக்கல், காத்தல், அழித்தல் எல் லாத் தொழிலும் அவளுடையது. அவ ளுடைய இச்சையினாலேயே பிரும்மா விஷ்ணு, மகேசுவரன் மூவரும் முத் தொழிலைச் செய்கிறார்கள் என்பார்கள்.

அகிலாண்ட கோடி உலகங்களுக்கெல்லாம் அன்னையானவள் அவள். எல்லாச் செயல் களும் அவள் செயலே.



பேசும் கார்

பேசும் கார் ஒன்றைப் பிரிட்டிஷ் லேலண்டு நிறுவனம் தயாரித்துள்ளது. பிரேக் சரியில்லை, பெட்ரோல் குறைந்து விட்டது என்பன போன்ற எச்சரிக்கை களை இந்தக் காரில் பொருத்தப்பட் டுள்ள எச்சரிக்கை சாதனமொன்று அறி விக்கிறது.

நன்றி: கலைக் கதிர்
தகவல்: கே. சங்கர்

பல்லாயிரங் கோடி யண்ட முதல்பதி
னன்கு புவனமும் மூர்த்தி முதல்
எல்லாந்தானுயப் படைத்தவளாம் வாலை
என்னுக்குள் என்னைப்போல்நின் றவளாம்
—கொங்கண சித்தர்

புகைப்படங்கள்: **திருமதி கோமதி சர்மா**

---

விட்டு, பிறகு இப்படி எங்கள் மீது குற்றமும் சொல்லி, பத்திரிகையிலும் எழுதுவதை நினைக் கும்பொழுது உண்மையான எழுத்தாளர் களுக்கு உரிய தர்மமா என்று நினைக்கத் தோன்றுகிறது.

இவர் மட்டும் தம் கதையில் மஞ்சள் எழுத்துக்களைப் புகுத்தி இன்றைய இளைஞர் களைக் கெடுக்க வழி செய்யலாம். ஆனால், நாங்கள் மட்டும் கேள்விகளைக் கேட்டால் கோபம் பொத்துக் கொண்டு வருகிறதே!

கோவை என். மதுபாலன்

● எழுத்தாளரின் ''நேருக்கு நேர் நிகழ்ச்சி'' என்பது வாசகனுக்கும், எழுத்தாளருக்கும் இடையே நடக்கும் ஒரு மனந் திறந்த உரை யாடல். எழுத்தாளரின் மனநிலை எவ்வாறு இருக்கிறது என்பதை உணர வேண்டிச் சில வாசக மாணவர்கள் இண்டலாகக் கேள்வி களைக் கேட்டிருக்கிறார்கள்.

ஐ. ஏ. எஸ். தேர்வில் ''நீங்கள் ஒரு தெரிந்தவர் வீட்டில் வரவேற்பறையில் உட் கார்ந்திருக்கிறீர்கள். அப்பொழுது ஒரு பெண் நிர்வாணமாக ஓடி வருகிறாள். நீங்கள் என்ன செய்வீர்கள்?'' என்ற கேள்வி கேட்கப்பட் டுள்ளது. ஆஹா! ஐ. ஏ. எஸ். தேர்வில் இவ்வளவு அசிங்கமான கேள்வியா? என்று யாரும் கேட்பதில்லை. ஏனென்றால் அது அந்தத் தேர்வு எழுதுபவரின் மனநிலையை அறியக் கேட்கப்பட்ட கேள்வி என்கிறோம்.

அது போலவே எழுத்தாளர் நல்ல மன நிலையில் இருப்பாராயின் இந்தக் கேள்வி களைச் சரியாகப் புரிந்து கொண்டிருப்பார். எழுத்தாளரைப் புண்படுத்தும் எண்ணம் எங்களுக்கு இல்லை.

இ. சு. பாலசுப்பிரமணியன்

தமிழ் நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம், கோவை

● திரு ஹேமா ஆனந்த தீர்த்தனின் அனுப வத்தைக் கல்கியில் கண்டோம். இம்மாதிரி யான கேள்விகளைக் கேட்டதற்காக மிகவும் வருந்துகிறோம். இது குறித்து எங்கள் இலக் கிய மன்ற ஆலோசகர் வருத்தம் தெரிவித்துக் கடிதம் எழுதியதை அவர் குறிப்பிடவே யில்லையே! அவர் மனக் குமுறலை எங்களால் உணர முடிகிறது. இருந்தாலும் நாங்கள் வருத்தம் தெரிவித்த பிறகும் அவர் இவ்வாறு எழுதியிருப்பது கண்ணியமாகப் படவில்லை. மேலும் அவர் மோசமெனக் காட்டியிருக்கும் கேள்விகளில் சிலவற்றைக் கேட்டதில் எந்தத் தவறும் இல்லை என்பதற்கும் காரணங்களை என்னால் கூற முடியும்.

வேறு பலகேள்விகள் தர மற்றவை என் பதையும் மறுப்பதற்கில்லை. அதற்காக வருந்துகிறோம். ஆனாலும் இது மாதிரியான கேள்விகளைக் கேட்கத் தூண்டியது இவரின் எழுத்துக்களே. மஞ்சள் எழுத்தாளர்களின் நிறம் வெளுக்கும்போது அவர்களுக்குக் கோபம் வரத்தானே செய்யும்.

கோவை மகேஸ்வரன்



# ஓ... எந்திர மனிதனே!

இன்று அதிகாலை மூன்று மணிக்கு என் ஜன்னல் வழியே வந்த ஒரு மழை வாசனையில் நான் விழித்துக் கொண்டேன்.

வெளியே தெரு விளக்கின் வெளிச்சத்தில் வந்து விழுந்து கொண்டிருந்தன வைரத் தாரைகள்.

இது என்ன? நான் விழித்துக் கொண்டே காணுகிற கனவா?

அந்த நேரத்தில் மின்னல் நீக்குச்சி கிழித்து மேற்கு வானம் அது மழைதான் என்று சொல்லிக்கொள்வது போல் சிரித்தது.

நானும் ஒரு புல்லாய்ப் புல்லரித்தேன். ஜன்னலோரம் நனையும் பூவாய்ப் புன கித்தேன்.

வானத்தை நோக்கிக் கைநீட்டிக் கொண்டு மழையை யாசித்துக் கொண்டிருந்த இலை களுக்கெல்லாம் இன்று கிளர்ச்சி.

கையில் டார்ச் விளக்கை எடுத்துக்கொண் டேன்.

உறக்கத்தையும், தலையணையையும் அணைத் துக்கொண்டு படுத்திருந்த என் மகனை எழுப்பினேன்.

உறக்கத்தையும் என்னையும் உதைத்துக் கொண்டே எழுந்தான்.

டார்ச் விளக்கின் வெளிச்சத்தை ஜன்ன லுக்கு வெளியே வீசி, அவனுக்கு மழையின் முகம் காட்டினேன்.

என் தோள்களைக் கட்டிக் கொண்டான்.

உறக்கக் கரகரப்பு ஒட்டியிருந்த குரலில் ''அப்பா, மழை'' என்று எனக்கு மழையை அறிமுகம் செய்து வைத்தான்.

மழையால் மண் அடைந்த சந்தோஷத் தைப் போலவே என் மகன் அடைந்த சந் தோஷத்தில் நான் சிலிர்த்தேன்.

•

அந்த மகாகவி சோகப்பட்டதற்குச்சற்றும் குறையாமல் நானும் சோகப்படுகிறேன்.

நம் மனிதர்களின்இதயத்தில் இயற்கையை நேசிக்கும் பிரதேசம் இருண்டே கிடக்கிறது.

இவர்கள் சூரியோதயத்தைப் பார்த்தது கூட ஒரு ராத்திரியில்தான்; அதாவது, திரைப் படத்தில்.

இவர்களுக்கு அஸ்தமனத்தை அறிமுகப் படுத்தியதே பாலு மகேந்திராதான்.

நாம் வாழ்வது எந்திர வாழ்க்கை என் பதையும், நாம் பரபரப்பின் குழந்தைகள் என்பதையும் நாம் அறிவோம்.

ஆனால் அதே நேரத்தில் வாழ்வின்சின்னச் சின்னச் சந்தோஷங்கள் நம்மைக் கடந்து போகும்போது நாம் உறங்கி விடுகிறோம்.

நம்மைச் சுற்றிச் சுற்றி நம்பார்வைகளை யாசிக்கும் சௌந்தரியங்கள் பலப் பல.

எந்திர மனிதனே! அவற்றுக்காய் உன் மனத்தைச் சிலநிமிடங்களாவது கடன்கொடு.

அதோ மரங்களின் மேல் நிறம் மாறும் தளிர்கள்!

உதிரும் தேதி தெரியாமல் உல்லாசமா யிருக்கும் மலர்கள்!

நட்சத்திரங்களின் இடைவெளிகள்!

நறுக்கிப்போட்ட நகமாயிருந்து ஒவ்வொரு சென்டி மீட்டராய் வளரும் நிலவு!

கரை நோக்கி வந்து தற்கொலை புரிந்து கொள்வதில் ஓர் அலை அடையும் ஆனந்தம்!

மின்சார ரயிலின் ஜன்னலோரத்துச் சந் தோஷம்!

மின்சாரம் இல்லாத இரவுகளில் மெழுகு வர்த்திச் சுடர்களின் நடனம்!

நகரத்தின் ராத்திரிச் சாலைகள்!

அதிகாலையில் தென்னங் கீற்றுக்களின் இடுக்கில் நுழைந்து வரும் சூரிய ஒளி!

இவைகளையெல்லாம் தரிசிப்பதற்கு உன் கண்களுக்குக் கற்றுக்கொடு எந்திரமனிதனே.

தவறாகப் புரிந்து வைத்திருக்கிறாய் நீ.

சொர்க்கம் என்பது சுவரொட்டிகளில் இல்லை.

உன்னைச் சுற்றியுமிருக்கிறது.

போர்க்களத்தில் பள்ளத்தில் பதுங்கி யிருக்கும் படைவீரன் கூட, தன் காலடியில் மிதிபடும் பூக்களைக் கண்டு கொஞ்சம் புன கிப்பானே — அப்படித்தான் அது.

நம்மை அமிழ்த்தும் நிகழ்கால நிமிஷங்களி லிருந்து நம் புலன்களைக் கொஞ்சம் சுதுப் பித்துக் கொள்வதற்கான ஏற்பாடு இது.

இயற்கையின் மடியில் நீ இளைப்பாறக் கற்றுக் கொண்டால் வேறெந்த வஸ்துக் களிலும் உன்னை இழக்க வேண்டியிருக்காது.

வருத்தமாயிருக்கிறது.

போகிற போக்கைப் பார்த்தால் நம் இளைஞன் இனி பூக்களில் கூட சதை வழி கிறதா என்று கவனிப்பான் போலிருக்கிறது.

எந்திர மனிதனே!

புலன்களைப் புனிதப்படுத்து.

இயற்கையை நேசி; இயற்கையைச் சுவாசி.

கண் திறக்கும் உன் குழந்தைகளுக்கு எழுத் துக்களுக்கு முன்னால் இயற்கையைச் சொல் லிக்கொடு!

புகைப்படம்: உத்ரா

# இறுதிப் போராட்டம்



* ஒரு பழங்கால மாதாகோயிலில் சைத்தானின் மகனும் அவன் எதிரியும்

## 3

ஹார்விக்கு ஒரே வியப்பு. ''கொலை முயற்சியா?'' என்று கேட்டான்.

''ஆமாம். இவை என் அப்பாவிடம் இருந்தன— இதே போல் ஏழு கத்திகள். கடைசியாக நான் இவைப் பார்த்தபோது எனக்கு வயது ஆறு'' என்றான் டேமியன் தார்ன். அதன் பிறகு அவன் கூறியவை ஹார்வியை மேலும் திகைப்பிலும் குழப்பத்திலும் ஆழ்த்தின. ''என் அப்பா இதனால் என்னைக் கொல்ல முயன்றார். ஆனால் என்னுடைய உண்மையான தந்தையாகிய சைத்தான் என்னைக் காப்பாற்றினார்!''

ஹார்வி மதுவை மேலும் ஒரு மிடறு விழுங்கிவிட்டு ''இதே போல் ஏழு கத்திகள் என்றா சொன்னாய்?'' என்று கேட்டான், பெருமூச்சுடன். ''அவை இப்போது எங்கே?''

''அதைத்தான் நாம் கண்டுபிடிக்க வேண்டும்'' என்றான் டேமியன் தார்ன். ''சிகாகோ தார்ன் மியூசியத்தில் இவை வைக்கப்பட்டிருந்தன. அந்தத் தொல் பொருள் காட்சியகம் தீவிபத்தில் அழிந்தது. என் உறவினர்கள் சிலர்கூட அதில் மடிந்தனர். அந்தப் பெரு நெருப்பில் எல்லாம் அழிந்து போயின என்று எண்ணியிருந்தேன். இந்தக் கத்திகளைத் தவிர என்பது இப்போது தெரிகிறது. நான் யார் என்பதை அறிந்திருக்கும் சிலரிடம் அவை சிக்கியிருக்கின்றன.''

''அப்படியானால் அவர்களுக்குக் கடவுளின் மகன் மறு அவதாரம் எடுக்கப் போகிற விவரமும் தெரிந்திருக்கும்.''

''ஆமாம். எனக்கு ஒரு எதிரிதான் என்று நினைத்திருந்தேன். இப்போது பல்கிப் பெருகிவிட்டார்கள்... தான் உடனே....''

இச்சமயம் ஹார்வி டீனுக்கு ஃபோன் வந்திருப்பதாக பட்லர் வந்து கூறவே ஹார்வி அவசரமாக விடை பெற்றான். அவன் மனைவிக்கு அன்று பிற்பகல் பிரசவ வலி கண்டிருந்தது அப்போதுதான் அவனுக்கு நினைவுவந்தது. பரபரப்பான நிகழ்ச்சிகள்பல அதைக்கூட மறக்கச் செய்துவிட்டன. ''நான் வரட்டுமா? பார்பராவைப் போய்ப் பார்க்க வேண்டும். ஃபோன் ஆஸ்பத்திரியிலிருந்து தான் இருக்கும்.''

''என் காரை எடுத்துக் கொண்டு போ'' என்ற டேமியன் தார்ன் ஜன்னலருகே சென்று வானை ஆராய்ந்தான். ''அட மிருகமே! நீ பிறக்க வேண்டிய வேளையும் வந்துவிட்டதா? பதுங்கிப் பதுங்கி வருகிறாயா? வா! வா!'' என்று அவன் வாய் ரகசியமாக முணுமுணுக்க, கரம் கத்தியைக் கூர் பார்த்தது.

● ● ●

**பா**திரி டிகார்லோவும் மற்றும் இவரும் ஆலோசனை செய்தனர்.

''என்ன பயங்கரமான மரணம்!''

''அடையாளமே தெரியாமல் கருகிப் போன உடல்... எத்தனை வேதனைப்பட்டிருப்பான்!''

''இறந்தவன் டி. வி. நிலையத்துக்குத் தொடர்புடையவன் அல்ல என்றும் அவனை இனம் கண்டுகொள்ள முடியவில்லை என்றும் செய்தி கூறுகிறது... கத்தியைப் பற்றி எந்தத் தகவலையும் டி. வி. செய்தி வெளியிடவில்லை. ஓர் விபத்து என்றே எல்லோரும் கருதுகிறார்கள்.''

''கத்தி அகப்படவில்லை யெனில் அது டேமியன் தார்னிடம் சிக்கிவிட்டது என்று அர்த்தம். இது விபத்து அல்ல என்பது அவனுக்குத் தெரியும்.''

''ஆனால் அமெரிக்கத் தூதரகத்திலிருந்து வெளிவந்துள்ள அறிக்கை துரதிர்ஷ்டவசமாக விபத்தில் இறந்தவனுக்கும் அமெரிக்கத் தூதருக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை என்று சொல்கிறதே!''

''வேறு எப்படிக் கூறுவான் தார்ன்?'' என்று கேட்டார் பாதிரி டிகார்லோ. ''அவனுக்கும் தனக்கும் எந்த விதத்திலும் சம்பந்தமில்லை என்று காட்டிக் கொள்ளத்தான் முயல்வான். இப்போது நம் முன் இரண்டு முக்கிய பணிகள் காத்திருக்கின்றன. ஒன்று, புனிதக் குழந்தை எங்கே பிறக்கப் போகிறது என்பதைக் கண்டறிந்து அதனைக் காத்தல். மற்றொன்று தார்னை அழித்தல். ஒருமுறை நம்மில் ஒருவன் தவறு செய்துவிட்டான். அழிந்தும் போனான். மறுமுறை தவறு நிகழவே நாம் அனுமதிக்கக் கூடாது.''

● ● ●

**வி**ஞ்ஞானி ஜார்ஜ் ஃபேபலுக்கு அன்று பரபரப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை. மூன்று நட்சத்திரங்கள் அண்ட சராசரத்தில் ஓரிடத்தில் இணை சேரப் போகிற அத் தருணம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அப்போது அந்தக் காஸியோபியா பகுதியில் நடக்கும் மாறுதல்களை ஆராய அவரது விஞ்ஞான உள்ளம் துடித்தது. அதே சமயத்தில் மூன்று பாதிரிகள் அவன் ஆய்வுக் கூடத்தில் நுழைந்தனர். ஃபேபலுக்கு இந்த இடையூறு பிடிக்கவில்லை. ஆயினும் அந்தப் பாதிரி டிகார்லோ முன்பு வான சாஸ்திரிகள் மாநாட்டின் இடையில் இதே போல் திடுதிப்பென்று நுழைந்து பேசிய வார்த்தைகள் அவனுக்கு நினைவு வந்தன. மூன்று சூரியன்கள் நெருங்கி வருவது பற்றி டிகார்லோவுக்குச் செய்தி அனுப்பியதும் அவன் தான். அதற்கு நன்றி கூறிப் போகத்தான் அவர் வந்திருக்கிறார்.

''கடவுள் உனக்கு வெகுமதி அளிப்பார்'' என்றார் அவர். ''24.3.82. இன்றுதானே அந்தப் புனித நாள்?''

''ஆம், கவனியுங்கள். நேரம் நெருங்குகிறது'' என்றான் ஃபேபல்.

டி. வி. திரையில் டிஜிடால் எண்கள் 12, 11, 10, 9, 8 என்று குறைந்து கொண்டே வந்தன. 3, 2, 1...0!

ஆய்வுக்கு உதவிய உபகரணங்கள் கிடுகிடுத்தன. டி. வி. திரையில் பிரகாச ஒளி படர்ந்தது. அதனூடே மூன்று வளையங்கள் ஒன்றோடொன்று இணைந்து துடிப்பது தெரிந்தது. திரையில் தோன்றிய தேசப் படத்தில் அவை தென் இங்கிலாந்தில் ஒரு கிராமப் பகுதி மீதாக ஒளிர்வதைக் காண முடிந்தது. டிகார்லோ மண்டியிட்டுச் சிலுவைக் குறியிட்டார். விம்மலும் ஆனந்தக் கண்ணீரும் வெளிப்படுவதை அவரால் தடுக்க முடியவில்லை.

அதே கணத்தில் டேமியன் உறக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்து எழுந்து இப்படியும் அப்படியுமாகத் துவண்டான். குப்பென்று வியர்த்துக் கொட்டியது. விரல்கள் துடையைக் கவ்வ நகங்கள் ஆழப்பதிந்து

**நம்பமுடியாத ஜோக்ஸ்**

''சார், இதுக்குத்தான் அப்பவே சொன்னேன்... இவ்வளவு உயரமா வீடு கட்டாதீங்கன்னு! இப்பப் பாருங்க மேகமெல்லாம் வந்து நம்ம மேலே மோதுது!''

—எம். பாஸ்கர்



கணவன்: தெருக் கோடியில் வரும் போதே நீ சமையல் செஞ்சுட்டிருக்கேன்னு கண்டு பிடிச்சுட்டேன்!

மனைவி: அவ்வளவு வாசனையாகவா இருந்தது?

கணவன்: இல்லே... நீங்க போன வாசனை அடிச்சுது!

—பட்டாணி



ரத்தத்தை வாங்க அவன் அண்ணாந்து கூரையைப் பார்த்தான். உடலிலிருந்து ஆன்மா பிய்த்துப் பிடுங்கப்படுவது போன்ற வேதனை நிரம்பிய ஒரு நாயின் ஊளையிடும் சப்தம் அப்போது எழுந்தது!

• • •

அமெரிக்கத் தூதரகத்தில் பிபிஸி நிருபர் என்ற முறையில் அடையாளச் சீட்டு காட்டி அனுமதி பெற்று உள்ளே சென்ற கேட், டாமியன் தார்ன் வேகமாக நடப்பதைப் பார்த்துவிட்டு இலேசான ஓட்டத்தில் அவனை எட்டிப் பிடித்தாள். லிஃப்டினுள் அவன் நுழையும் சமயம் தானும் புகுந்து கொண்டாள்.

''நிலையத்தில் ஏற்பட்ட விபத்துக்காக வருந்துகிறேன். அதற்கு ஈடுகட்டுவது போல் நான் ஏதேனும் செய்யலாமா?''

அவன் புன்னகையுடன், ''பேட்டியை முடிக்க வேண்டாமா?'' என்றான்.

அவள் நன்றியுடன் தலையாட்டினாள்.

''ஆனால் உங்கள் டி. வி. நிலையம் ஆபத்தானதாக இருக்கிறது. என் வீட்டிலேயே வைத்துக் கொள்ளலாமே பேட்டியை? பேட்டிக்குப் பிறகு இருந்து சாப்பிட்டுவிட்டுப் போகலாம். உன் மகனையும் அழைத்து வா!''

கேட்டுக்கு வியப்பாக இருந்தது. ''பீட்டர் எதற்கு?''

''ஏன் என்னை அவன் புகழ்ந்ததாக நீதானே சொன்னாய்? அவனைப் பார்க்க எனக்கு ஆவலாய் இராதா?''

யாரும் வம்பு பேசக் கூடாது என்பதற்காக அவன் பீட்டரையும் அழைத்து வரச் சொல்கிறான் என்பது கேட்டுக்குப் புரிந்தது. அவளுக்குத் தன் மகன் மீதே சற்றுப் பொறாமையாக இருந்தது!

அவளை அனுப்பிவிட்டு டேமியன் தார்ன் ஹார்வியின் அறையை அடைந்தான்.

''ஆண் குழந்தை'' என்று மகிழ்ச்சியோடு அறிவித்தான் ஹார்வி. அந்த ஆனந்தத்தை அலட்சியப்படுத்திவிட்டு ''கத்திகள்...கத்திகள் பற்றித் தகவல் கிடைத்ததா?'' என்று கேட்டான் டாமியன் அவசரத்துடன் — ஒரு கண்டிப்புடன்.

ஹார்வியின் மகிழ்ச்சி இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. டாமியன் தாரின் முழு ஆளுமைக்கு வசப்பட்டிருந்த அவன் இப்போது இயந்திர கதியில் பேசினான். ''நமது ஒற்றர்கள் சில விஷயங்களைக் கண்டறிந்திருக்கிறார்கள். கத்திகள் ஏலத்துக்கு வந்தனவாம். ஏலத்தில் எடுத்தவர் அவற்றை இத்தாலியில் ஒரு பாதிரிக்குத் தந்தாராம்....''

• • •

ரீடிங் ஸ்டேஷனைத் தாண்டிப் பல்கலைக் கழக நகரான ஆக்ஸ்ஃபோர்டைக் கடந்து வெகு வேகமாகச் சென்றது ரயில். உள்ளே அமர்ந்திருந்த மாட்டியஸ் தன் தோளிலிருந்து தொங்கிய பையைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டான். அதனுள்ளே இருந்த கத்தியை அவன் விரல்கள் தொட்டுணர்வால் அறிந்தன. பையை எங்கும் வைக்கவோ, மாட்டவோ அவனுக்கு விருப்பமில்லை. வேறு யாரேனும் தவறுதலாக அதை எடுத்துப் பிரித்துக் கத்தியைப் பார்த்து விட்டால்...

டி கார்லோவிடம் அவன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்தான். அடுத்த வாய்ப்பு எனக்குக் கொடுங்கள். பெனிடோ தோல்வி கண்ட முயற்சியில் நான் வெற்றி பெறுவேன். நிச்சயம்.

டி கார்லோ புன்னகையுடன் சம்மதித்திருந்தார். ஆக்ஸ்ஃபோர்டைக் கடந்து தொலைவில் அந்தக் கிராமப்புறப் பகுதிக்கு டாமியனை ஈர்த்துச் செல்வது மாட்டியஸின் திட்டம். டாமியன் தன்னைப் பின் தொடர்ந்து இதே ரயிலில் வருகிறானா? ஒருவேளை ஹெலிகாப்டரில் பறப்பானோ? எப்படியானால் என்ன? நான் ஏசுவின் மறு பிறப்பான புனிதக் குழந்தையைப் பார்க்கத்தான் — காக்கத்தான் — லண்டனை விட்டுக் கிளம்பிக் கிராமப்புறப் பக்கமாகப் பயணப்படுகிறேன் என்று டாமியன் கருதுவான். எனவே என்னைப் பின் தொடர்ந்து வந்து அந்தக் குழந்தையைக்





## சினிமா ஜோக்ஸ்

''என் மனைவி 'இரட்டை மனிதன்' பார்த்துட்டு வந்து இரட்டைக் குழந்தை பெத்தா. 'மூன்று முகம்' பார்த்துட்டு வந்து மூணு பெத்தா. இப்ப 'நாலு பேருக்கு நன்றி' போகணும்னு சொல்றா சார்!''

—என். ராமகிருஷ்ணன்

''என்னங்க, இந்த சினிமாப் பட பூஜையிலே வெங்காயம், பூண்டு எல்லாம் வச்சிருக்கு?''

''இவங்க தயாரிக்கப் போவது மசாலாப் படமாம்!''

—ச. சம்பத்குமார்

கைப்பற்ற நிச்சயம் முயல்வான். குழந்தை பிறந்துள்ள திசையில் அல்லாது வேறு திசையில் அவனை ஈர்த்துச் சென்று சமயம் வாய்க்கும்போது தீர்த்துக் கட்டிவிடவேண்டியதுதான்!

அவன் இறங்கி நடந்த ஸ்டேஷனில் அவன் டிக்கெட்டைக் கேட்கக் கூட ஆள் இல்லை. குறுகிய கிராமப் பாட்டை ஒன்றின் வழியாக நடக்கும்போது அவனுக்குத் தூண்டிலில் நெளியும் புழு நினைவு வந்தது. 'அந்தப் புழுவாக நான். சிக்கப் போகும் மீனாக டாமியன் தார்ன்! அல்லது மரத்தில் கட்டிய ஆடு நான். அதன் மீது பாயப் போகும் புலியாக தார்ன். நிச்சயம் அவன் மரணத்தைத் தழுவப் போகிறான்...'

ஒரு பஸ்ஸில் ஏறினான் மாட்டியஸ். அதை ஒரு கார் பின்தொடர்வதைப் பார்த்தான். ம்ம்... புழுவை விழுங்க மீன் வந்துவிட்டது... கால் மணி நேரப் பயணத்துக்குப் பிறகு இறங்கினான் மாட்டியஸ். தன் சகாக்களுடன் வாக்கி டாக்கியில் ரேடியோ தொடர்புகொண்டு தான் இருக்கும் இடத்தைத் தெரிவித்தான். ''மீன் சிக்கியது'' என்றான். ''திட்டம் தொடரட்டும்'' என்று 'பதில் கிடைத்தது.

அங்கே ஒரு பழங்காலத்திய பழுதுற்றிருந்த மாதா கோயில். அருகே கல்லறைகள். மயானப் பகுதியில் மெல்ல நடந்தான் மாட்டியஸ்.

டாமியன் வந்த காரில் ஒரு நாய் இருந்தது. அது அமைதியாக இருந்தது. கார் நின்றது. நாய் இறங்கியது.

மாட்டியஸ் இருகாட்டின் ஊடே நடந்து கொண்டிருந்தான். ஏதேதோ விசித்திரமான உருவங்கள் நிழல்களாக அவனைச் சூழ்ந்தன. 'இதெல்லாம் என்ன பிரமை' என்று அவன் தனக்குத் தானே சிரித்துக்கொண்டான். அந்த நிழல்களைப் பார்க்க விரும்பாதவன் போல் திரும்பினான்..... ஐயோ இது என்ன! நரகத்தின் வாய் இது தானா...!

எவ்வளவு முயன்றும் ரேடியோ தொடர்பு மறுபடியும் கிட்டாதபோது மாட்டியஸின் நண்பர்களான மார்ட்டின், பாவ்லோ ஆகிய இருவரும் கவலையுற்றார்கள். விரைவாக அந்த இடத்துக்கு வந்து சேர்ந்து அதே மாதா கோயிலை அடைந்தார்கள். அங்கே மாட்டியஸைத் தேடி வேறு யாரேனும் வருவார்கள் என்ற எண்ணத்தில் அந்தச் சைத்தானின் மகன் டாமியன் தார்ன் காத்திருக்கலாம் இல்லையா? எச்சரிக்கையானார்கள்.

ஒளிந்திருக்கும் டாமியனைக் கண்டுபிடித்துக் குத்திக் கொன்றுவிடத் திட்டமிட்டார்கள். 'புனித மாதா குடிகொண்டிருக்கும்' ஆல்டார்' பகுதியில்தான் அவன் இருப்பான் என்று பாவ்லோவுக்குத் தோன்றியது. அதற்கேற்ப அங்கே ஓர் உருவம் மங்கலாகத் தெரிய...

பாவ்லோ உயரே இருந்து குதித்தான்; கத்தியைக் கழுத்தில் 'சதக்'கென்று செருகினான். மார்டின் விரைவாகப் பின்தொடர்ந்தான். 'கூச்சல் போடாதேடா சைத்தானின் மகனே!' என்று மனத்துக்குள் கூறியபடியே தன் பங்குக்குக் கத்தியால் பணியை முடித்தான். அந்த உடல் சரிந்தது. இருவர் தேகங்களும் நடுங்கின. சிலுவைக் குறியிட்டபடியே வியர்த்துக் கொட்ட நின்றனர்.

ஒரிரு விநாடிகளுக்குப் பிறகு அந்தப் பயங்கரத்தால் ஏற்பட்ட நடுக்கம் நீங்காமலேயே பாவ்லோ சடலத்தைப் புரட்டினான். இருவரும் மாட்டியஸின் முகத்தைக் காண அதிர்ச்சியுற்றுத் துள்ளிப் பின் வாங்கினர். ஏதோ பயங்கரத்தைக் கண்ட பாவத்தில் மாட்டியஸின் பிதுங்கிய விழிகள் அவர்களை நோக்கின.

பாவ்லோவும் மார்ட்டினும் ஒருவரை ஒருவர் பார்த்து விழித்தனர். 'இது என்ன? மாட்டியஸைச் சைத்தானின் மகன் என்று எண்ணித் தவறுதலாக நாம் கொன்றுவிட்டோமா? அல்லது ஏற்கனவே இறந்துவிட்ட மாட்டியஸின் சவத்தைத்தான் மீண்டும் கத்தியால் குத்தினோமா? சடலத்தைத் தான் குத்தினோம் என்றால் மாட்டியஸ் எப்படி இறந்தான்? எதைக் கண்டு பயந்து அந்தப் பயத்திலேயே உயிரை விட்டான்?'

(தொடரும்)

# பிரதமரின் மகனிடம் பயமா?

● ''சொன்னார் ராஜீவ்'' என்று முதல் பக்கத்தில் செய்திகளை வெளியிட்டுள்ளீர்களே தவிர உங்கள் கருத்தைச் சொல்லவே இல்லையே? ஏன் பிரதமரின் மகன் என்ற பயமா?
தக்கலை ஒ. எஸ். உதயசேகர்.

கவனிக்கவில்லையா? தலைப்புக்கு மேலேயே முதலில் எமது கருத்துத்தானே அச்சாகியுள்ளது!
-ஆர் (படம் சுபா)

● கருங்கல் ஆர். ஜார்ஜ் குறிப்பிட்ட துணுக்கும் (நேசமணியின் தேர்தல் சின்னம் பானை) நெய்யூர் கல்யாணி என்பவர் குடம் என்று கூறியதும் உண்மைதான். காரணம் குமரி மாவட்டத்தில் குடத்தைப் பானை என்றும் சொல்வார்கள். எனவே, கருங்கல் ஆர். ஜார்ஜின் துணுக்கு தவறே இல்லை. சரிதான்.
மார்த்தாண்டம் எம். பிரபா

● உலகின் நன்மை கருதி வல்லரசுகளின் முறைகேடான போக்கைச் சுட்டிக் காட்டும் வகையில் அமைந்திருந்த நடுப்பக்கச் செய்தித் துணுக்குகளும் வரை படங்களும் 'கல்கி'யின் தரத்துக்கு மேலும் ஒரு எடுத்துக்காட்டாக அமைந்தன.
வால்குடி ஆ. சந்திரசேகரன்

● விஜயா வரதன் எழுதிய முதல் போணி சிறுகதை மிகவும் அருமையான படைப்பு. மனத்தளவில் மிகவும் உணர்ச்சி வயப்படும் படி அமைந்ததோடல்லாமல், பூக்காரியின் உறுதி மனப்பான்மையும், பெருந்தன்மையும் மெய்சிலிர்க்க வைத்து விட்டது.
பரசலூர் புவனா நாகராஜன்

● கர்நாடக முதல்வரின் பேட்டி கண்டேன். இன்றைக்கு இந்தியாவில் மிகச் சிறப்பாகப் பணியாற்றும் ஒரு முதல்வராக அவர் திகழ்கிறார். அவர் மீது மக்கள் வைத்துள்ள நம்பிக்கை வீண்போகவில்லை.
செங்கவல்லி வாசுகி



● மணி விழாக் காணப்போகும் கலைஞரைக் கண்ணியத்துடன் விமர்சித்து மனம் திறந்து பாராட்டித் தலையங்கம் எழுதிய நீர் உமது நெஞ்சில் நிறைவை மட்டுமா சுமந்தீர்? மனத்தைக் குகையாக்காமல் ஜோதியையும் ஏற்றி அல்லவா ஒளிபடச் செய்துவிட்டீர்?
ஸ்ரீரங்கம் ஆர். கோபாலன்

● சிறு பிராயத் தவறுகளைத் துணிந்து வெளியே சொல்லி அதனை ஒத்துக்கொள்ளும் மனப்பாங்கு மக்களிடையே புகழ் பெற்றவர்கள் எத்தனை பேரிடம் உள்ளது? ரஜினி வித்தியாசமானவர்தான்.
மதுரை எஸ். என். ராஜா

● 'சொன்னார் ராஜீவ்' என்ற தலைப்பில் அண்மையில் சென்னை வந்திருந்த ராஜீவ் காந்தி கூறிய வரவேற்கத் தக்க பல கருத்துக்களைப் பிரசுரித்துத் தாங்கள் நடுநிலைமைப் பத்திரிகையாளர்தான் என்பதை நிலைநிறுத்தி விட்டீர்கள்.

நடுப் பக்கத்தில் உள்ள ''அர்த்த மற்ற ஆயுதக் குவிப்பு'' ஓர் அர்த்தமுள்ள பகுதி.

'படுகொலைக்கு ஆளான பண்பாளர்' படித்தேன். வங்கிகளில் பணியாற்றுவோர் அதிகச் சம்பளம் வாங்குகிறார்கள் என்கிறார்களே, அவர்களின் உயிருக்கு எவ்விதப் பாதுகாப்பும் இல்லை என்பதை நிரூபித்து விட்டது கர்நாடகா பாங்க் அதிகாரி கொலை சம்பவம்.
திருநெல்வேலி எஸ். கணேசன்.

● 'படுகொலைக்கு ஆளான பண்பாளர்' திரு ஞானசம்பந்தம் பற்றி அவரது மகன் மாலதி கூறியதைப் படித்தபோது அவர் விழிகளை மட்டுமல்ல, என் விழிகளையும் கண்ணீர் மறைத்தது.
திருப்பூர்-1 எஸ். ரமேஷ் குமார்

● . ''சட்டம்'' சம்பந்தமான சந்தேகங்களுக்கு விடையளித்து வித்தியாசமான முறையில் விமரிசனமும் எழுதிவிட்டீர்களே சபாஷ்.
அயன்புரம் த. சத்தியநாராயணன்

## வட்டமேஜை

பாலகுமாரன்

# இரும்புக் குதிரைகள்




## அத்தியாயம் 23

வேலைக்குச் சேர்ந்த பதினைந்தாவது நிமிடத்திற்குள் அந்த லாரிக் கம்பெனியின் ஆண்கள் அத்தனை பேரும் ஒரு முறை நின்று பார்த்துவிட்டுப் போனார்கள். குறுக்கே போகிறபோது ஒரு முறை வருகிறபோது ஒருமுறை விழியோரம் பார்த்து விட்டுப் போனார்கள். கூலிகள், கிளார்க்குகள், எடுபிடிப் பையன்கள் எல்லோர் பார்வையும் ஒரே விதமாய் இருந்தன. இந்தப் பார்வை காயத்ரிக்கு ஒன்றும் புதிதல்ல. மன்னார்குடியிலும் உண்டு. சற்று அதிகமாகவே உண்டு.

மன்னார்குடி இன்ஸ்டிடியூட்டில் ஸிஸ்டர், ஸிஸ்டர் என்று அதிகம் பேசிய பையன்தான் 'உங்களை நான் காதலிக்கிறேன். என்னை நீங்கள் காதலிக்கிறீர்களா. உடன் பதில். இப்படிக்கு' என்று கடிதம் எழுதினான். இளமையான ஷார்ட் ஹாண்ட் மாஸ்டர் ஒருவர் 'என்ன காயத்ரி காமர்ஸ் கத்துக் குடுக்க வந்துட்ட. எப்பக் கல்யாணம் பண்ணிக்கப் போறே' என்று நாலுபேர் நடுவே கேட்டார்.

''நல்ல மாப்பிள்ளையாக் கெடைச்சவுடனே சார்.''

''ஏன் நான் இருக்கேனே தெரியலையா''—ஜோக் அடித்தார்.

''தெரியலையே சார்.''

''என்ன தெரியலே?''

''நல்ல மாப்பிள்ளையாத் தெரியலையே சார்.''




கூட இருந்தவர்கள் வாய் விட்டுச் சிரித்த போது முகம் கன்டிப் போனார். 'நான் எவ்வளவு நல்லவன் தெரியுமா? நாலு பேர் முன்னால் என்னை இப்படி ஏன் அவமானம் செய்தாய்?' என்று விளக்கம் கேட்டு நாலு பக்கம் கடிதம் எழுதினார்.

'''நீங்க சும்மா இருங்க காயத்ரி.எவனாவது வாலாட்டினாச் சொல்லுங்க. நடுத் தெருவுல சட்டையைப் பிடிச்சுப் பளார்னு செவுட்ல இழுத்துப்புடறேன்.'' அரசகலைகையில்பி.ஏ. முடித்துப் பொழுது போக காமர்ஸ் படிப்புக்கு வந்த கதர்ச் சட்டைப் பையன் ஆதரவு தெரிவித்தான்.

நாலு மாதம் கழித்து. ''காயத்ரி என்னை லவ் பண்றீங்களான்னு கேக்கலை. கல்யாணம் கட்டிக்கிறீங்களான்னு கேட்கத் தோணுது. எனக்கு நாலு அண்ணன். நாலு மதனி. ஒருத்தருமே சரியில்லேன்னு தோணுது. பொருத்தமான பொண்ணு கெடச்சாத் தான் கல்யாணம் கட்டிக்கணும். இல்லேன்னு கல்யாணமே வேணாம்னு தோணுது. நான் பேசறது தப்புங்களா?''

காயத்ரி அவனையும் மறுதலித்தாள். அது வரை இடமாய்ப் பழியவன் மாறிப் போனான். இன்ஸ்டிட்யூட் பிரிவு உபசார விழாவில்' ஒரு வெள்ளை ரோசாப் பூவை ஒரு குருவி காதலிச்சது. ரோசாப்பூ காதலிக்கலேன்னு தெரிஞ்சதும் முள்ளுமேலே மோதி மோதித் தன் ரத்தத்தை யெல்லாம் ரோசாப் பூ மேலே அபிஷேகம் செய்தது என்று கதை சொன்னான்.

காயத்ரி சட்டென்று புரிந்து கொண்

டான். நிறையப் பையன்களை சினிமா ஆட்டிப் படைக்கிறது என்று தெரிந்து கொண்டான். வெகுளியாய், நகைச்சுவையாய், நல்லவனாப் பெண்ணைக் காதலிக்க 'வேஷம்' கட்டியதைப் பார்த்து அதிசயித்தான். உடுத்துவது மாதிரி, உண்பது மாதிரி காதல் ஒரு அவஸ்யத் தேவை என்று இவர்கள் பரபரப்பதைப் புரிந்து கொண்டான்.

ஐயன்மீர்... காதல் என்பது என்ன... காதல் என்பது ஆக்கிரமித்தலா... அடிபணிவதா... கவர்ந்து போவதா... விலைப் பொருளா... பண்ட மாற்று... நாம் இதைப் பற்றித் தெளிவாய் யோசிக்கத் துவங்குவோம். எனக்குத் தோன்றுகிறது காதல் என்பது விட்டுக் கொடுத்தல். எந்த எதிர்பார்ப்புமின்றி இயல்பாய் நேசித்தல். நேசம் வளைத்துப் போடுமா? விலை பேசுமா? மண்டியிடுமா? இவைகள் வன்முறையல்லவா? வன்முறையில் காதல் மலருமா? காதலை வன்முறை வளர்க்குமானால் அது காதல்தானா?

எதேச்சையாய் ஜே. கிருஷ்ணமூர்த்தி புத்தகம் கைக்குக் கிடைத்தது. ஒரு முறை கட்டுரையைப் படித்ததுமே பளிச்சென்று புரிந்து போயிற்று. கட்டுரையைப் பார்த்துவிட்டு 'அடடே' என்று துள்ளிக் குதித்தான். சந்தோஷமானான். இது பற்றி எந்தக் கலவரமும் இல்லாது போனான். கனவும் சினிமாவும் வெகு தூரம் நகர்ந்து விட்டன. 'அத்தான் என்னைக் கைவிடாதீங்க' என்று வெள்ளித் திரை அரற்றியபோது 'நான் வீட்டுக்குப் போறேன்மா. நீங்க நல்லா அழுதுட்டு வாங்க' என்று பாதிப் படத்திலேயே எழுந்து போனான்.

எங்கே நிம்மதி என்று சிலோன் ரேடியோ அலறியபோது பளிச்சென்று ரேடியோவை அணைத்து மனத்தில் கூட சத்தமில்லாமல் இருக்கும் நேரம்தான் நிம்மதி என்று பதில் சொன்னான்.

''என்டி நல்ல பாட்டை அணைச்சுட்டே... என்ன இது நல்ல பாட்டு இல்லையா... அப்ப எது தான் நல்ல பாட்டு. ஒண்ணு கூட இல்லையா... ஒண்ணே ஒண்ணு கூட?''

காயத்ரி யோசித்துவிட்டு, ''இதுல ரெண்டு லைன் வெளிப்பிளாத் தெரியுதுக்கா' என்றான்.

''எதுடி?''

''அள்ளித் தந்த பூமி அன்னையல்லவா
சொல்லித் தந்த வானம் தந்தையல்லவா''

வானமும் பூமியும் ஜனங்களிடம் என்ன எதிர்பார்க்கின்றன. எதை எதிர்பார்த்து அள்ளித் தருகிறது பூமி? எதை எதிர்பார்த்துச் சொல்லித் தருகிறது வானம்' வானம் அப்பா மாதிரி. அப்பா வானம் மாதிரி. பேசப் பேச அப்பாவை ரொம்பப் பிடித்துப் போயிற்று. அப்பா மாதிரி இருக்கிறவனைத் தான் காதலிக்கமுடியும் என்று தோன்றிற்று.

மற்றபடி இந்தக் கீழ்வெட்டுப் பார்வை யெல்லாம் விஷயமே இல்லை.

இரண்டே நாட்களில் லாரிக் கம்பெனிக் கணக்குப் புரிந்து போயிற்று. அரசு சௌகர்யத்திற்கு டபிள் என்ட்ரி. காந்திலால் சௌகரியத்துக்கு அவனாகவே ஹிந்தியில் எழுதும் சிங்கிள் என்ட்ரி. மற்றபடி கடிதப் போக்குவரத்து வழக்கமானது. நாலு வரி ஐந்து வரிக் கடிதங்கள். வெகு சீக்கிரமே இது இடமான லாரிக் கம்பெனி என்று தெரிந்து போயிற்று. எல்லா லாரியும் வங்கியின் மூலம் கடனில் வாங்கப்பட்டிருக்கிறது. கடன் அடையும் நேரத்தில் விற்கப்பட்டது. மறுபடி புது லாரிக்கெனக் கடன் வாங்கப் பட்டது. நாலு வருடமாய் ஒரு லாரி சேதத்துக்கு இன்ஷூரன்ஸ் கம்பெனியுடன் பெருத்த சண்டை போடப் பட்டிருந்தது. துருவித் துருவி காயத்ரி ஃபைல்களைப் படிப்பதை காந்திலால் பார்த்தான். இது அப்பனைப் போல் பத்து மடங்கு கெட்டி என்று புரிந்து கொண்டான்.

---

## டாக்டர்கள் (மன்னிக்க) ஜோக்ஸ்



நோயாளி: இந்த ஆபரேஷன் செய்துக்கிறதனாலே உயிருக்கு ஒண்ணும் ஆபத்தில்லையே?

டாக்டர்: அதைத் தெரிஞ்சுக்கத்தானே இந்தப் புது ஆபரேஷனையே பண்ணப் போறேன்!

—இ.ச. கோபுராஜ்

நோயாளி: எனக்கு ஒரு சத்தியம் செய்து கொடுப்பீர்களா டாக்டர்?

டாக்டர்: என்ன சத்தியம்?

நோயாளி: நான் இறந்த பிறகு இனிமேல் என் குடும்பத்தில் யாருக்கும் வைத்தியம் செய்ய மாட்டீர்கள் என்று?

—கே. கணேஷ்



## அரசியல் ஜோக்ஸ்

''நீங்க ஆட்சிக்கு வந்தா லஞ்சத்தை ஒழிப்போம்னு சொன்னீங்களே?''

''அடுத்தவங்க வாங்கறதைத்தானே சொன்னோம்? நாங்க வாங்கறதைச் சொல்லலியே!''

—பாரதி ரங்கன்



தொண்டர் 1: எடைக்கு எடை வெள்ளிக் கட்டி தரேன்னு சொல்லியும் தலைவர் ஏன் தராசுத் தட்டில் உட்கார மாட்டேன்னு தகராறு பண்றார்?

தொண்டர் 2: தம் மனைவியையும் மடியில் உட்கார வைக்கணும்னு பிடிவாதம் பிடிக்கிறார்!

—ஆர். அரிகோபி

''இந்த இங்கிலீஷ் கம்பெனி கடைசியில ஒரு தப்பு இருக்கு சார்.''

''என்னங்கோ மேடம்.''

''நம்ம இன்வாய்ஸ இவங்க திருப்பி அனுப்பிட்டாங்க.''

''ஆமா. சரக்கு சரியான நேரத்துல போகலே. பணம் தர மாட்டேன்னுங்க. சரின்னுட்டேன்.''

''ஓ.கே. அதுக்கு இன்வாய்ஸைத் திருப்பி அனுப்பக் கூடாது. அதை ஏத்துக்கிட்டு டெபிட் நோட் தரணும். டெபிட் நோட்ல காரணம் காட்டணும்.''

''ஆங்.''

''இல்லேன்னு நாம இன்வாய்ஸ் பண்ணாத மாதிரி போகும். நாம் இன்வாய்ஸ் பண்ணதபோது நாலாயிரம் நஷ்டம் காமிக்க முடியாது.''

''அவங்க திருப்பி அனுப்பிச்ச லெட்டர் இருக்கே.''

''அது போதாது. லெட்டர் கரெஸ்பான்டென்ஸ் அக்கௌண்ட் ரெஜிஸ்டர்ல வராது.''

''என்ன மேடம் பண்றது?''

''திருப்பி இன்வாய்ஸ் அனுப்பி டெபிட் பண்ணச் சொல்வோம்.''

''அனுப்பிச்சுப் பாருங்க. வெவரமா எழுதுங்க. ம்ம்ம்.... எழுதினாக் கூடப் போறது. நேரில சொல்லணும். என் வண்டில போங்க. அங்க யாரைப் பார்க்கச் சொல்றது? ஆங்... விஸ்வநாதன். உங்க அப்பாருக்கும் ரொம்ப ஸ்நேகிதம். அவருகிட்டப் போங்க. அப்புறம் அக்கௌண்ட்ஸ் ஆளுங்க கிட்டப் பேசுங்க. நான் போன்ல விசு கிட்டச் சொல்றேன். மாட்டேன் முடியாதுன்னு வந்துடுங்க. மொறச்சுக்க வேணும். எத்தினியோ நஷ்டத்துல இதுவும் ஒண்ணு.''

காயத்ரி பேனா, பென்சிலை எடுத்துக்கொண்டாள். ஃபைலை மடியில் இருத்திக்கொண்டாள். காரில் பின் சீட்டில் சரிந்து புடவையைப் போர்த்திக் கொண்டாள்.

சுருண்ட கூந்தலும் மூக்குத்தியுமாய்ப் பெரிய பூக்கள் போட்ட புடவையில் டெலிபோன் ஆபரேட்டர் 'ஏன் இன்னிக்கு எனக்கு போன் பண்ணலை' என்று யாரிடமோ செல்லமாய்ச் சண்டை பிட்டுக்கொண்டிருந்தாள். 'கொஞ்சம் இரும்மா வச்சுடாத ப்ளீஸ்' என்று சொல்லிவிட்டு இவளை 'யெஸ்' என்று அதட்டினாள். விவரம் சொன்னதும் பட்டன்களைத் தட்டி ''விசு உன் வருகை இங்கே தேவைப்படுகிறது'' என்றாள். ''நேத்திக்குப் பல் தேய்ச்ச உடனே வீட்லே சண்டை. அது பத்தித்தான் உனக்குச் சொல்லணும்னு தோணிச்சு. நீ உன் வொய்ஃபோட சண்டைன்னு சொன்னியே அதே மாதிரி தான்.''

காயத்ரி முகத்தைத் திருப்பிக்கொண்டாள். காத்திருந்தாள். மேஜை ஜாடியில் நெட்டி ரோஜாக்கள் ஆடின. தரைக் கம்பளத்தில் கம்பெனி பெயர் எழுதியிருந்தது. கண்ணாடிக் கதவுக்கு வெளியே வாகனங்கள் சப்தமின்றி விரைந்தன. ஒரு கண்ணாடிக் கதவில் 'புஷ்' என்றும் மற்றொன்றில் 'புல்' என்றும் எழுதியிருந்தது. யாரோ ஒருவன் 'புல்'லைத் தள்ளியும் 'புஷ்'ஷை இழுத்தும் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தான். உதவலாமா என்று நினைத்தபோது ஷூக்களின் க்ரீச்சலோடு உயரமாய் ஓர் உருவம் வந்தது. 'யெஸ் சுமதி, யார் எனக்காகக் காத்திருப்பது' என்று ஆப்பரேட்டரிடம் கேட்டது. சுமதி யாலவன் கட்டு விரலால் காயத்ரியைக் காட்டிவிட்டுத் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தாள்.

''யெஸ். ஐயாம் விஸ்வநாதன். நான் உங்களுக்கு என்ன செய்ய முடியும்?''

காயத்ரி காத்திலால் கம்பெனி பெயரைச் சொன்னாள்.

''ஹா... ஃபோன் வந்தது. உங்களுக்கு அக்கௌண்ட்ஸ் டிபார்ட்மெண்ட் காட்டவேண்டும். அல்லோ தானே.''

''இல்லே. இந்த இன்வாய்ஸ் பத்தி....''

''ஸாரி. நான் அக்கௌண்ட்ஸ் ஆள் இல்லே. நான் அவங்களை அறிமுகப்படுத்தறேன். மீதி என் உதவி தேவைன்னு வந்து பார்க்கறேன். கம் இன்.'' மறுபடி கண்

றூடிக் கதவு தாண்டிப் பல மேஜைகளைக் கடந்து உள்ளே நடந்தார்கள். சிடுசிடுப்பான ஒரு மனிதர் முன்னே நாற்காலியை நகர்த்திக் காயத்ரியை விஸ்வநாதன் உட்காரச் சொன்னான். குனிந்து அவளைப் பற்றிய விவரம் சொன்னான்.

''ஆமா. இதுக்கு நீ என்ன? இவங்க நேரே வரட்டுமே.''

''இந்தப் பெண்மணியின் தந்தை எனக்கு நல்ல நண்பர். எனக்குப் பிடித்த எழுத்தாளர்.''

''ஆமாமா... உனக்கு இந்தக் கதை எழுதற பைத்தியம் உண்டில்லையா. இது கிடக்கட்டும். நேத்திக்கு வாங்கின ஆயிரம் ரூபாய்க்குக் கணக்கு எங்க?''

''அல்வா வாங்கித் தின்னுட்டேன். இன்னும் கொஞ்சம் பாக்கி இருக்கு. முடிச்சிட்டு சாயந்திரமாக் கணக்குச் சொல்றேன்.'' ஷூக்கள் கிரீச்சிட நகர்ந்தான்.

''ம்ம்... டெல் மீ.''

காயத்ரி விவரம் கூறினாள்.

''இதுக்கு இத்தனை நாளா? போன்ல ஐயாம் ஸாரின்னு இன்வாய்ஸ் கேட்டு வாங்கிட்டு இப்போ இதுக்கு நல்ல நாள் பார்த்திருக்காராக்கும். உடனே டெபிட் நோட் கேட்க வேண்டியதுதானே. உசந்த தந்தி உங்க காந்திலால்.''

காயத்ரி பேசாமல் இருந்தாள்.

''உங்களுக்கு எந்த ஊரு?''

''மன்னார்குடி.''

''அடி சக்கை. காந்திலாலுக்கு மன்னார்குடி அக்கௌன்டென்ட்டா. வேண்டியதுதான். என்ன சம்பளம் தரான். காசுன்னா மூக்கு சிந்துவானே?''

காயத்ரி மெல்லிய குரலில் ஐந்நூறு என்றாள்.

''அடி சக்கை. மூக்குகூட சிந்தலையா?''

அவர் கணக்குப்படி மூக்கு சிந்துவதென்றால் எத்தனை ரூபாய் என்று காயத்ரி யோசிக்க ஆரம்பித்து நிறுத்திக்கொண்டாள்.

''சரி. லெட்டரைக் குடுத்துட்டுப் போங்கோ. நாளைக்கு டெபிட் நோட் அனுப்பறேன். காந்தி ஆபீஸ்ல இருக்கானா? ஹலோ...'' போனை எடுத்து படபடவென்று ஆபரேட்டருக்குத் தட்டினார். ''இவ ஒருத்தி சதா ஆம்பிளையோட பேசிண்டு லைனே தரமாட்டா.''

''தேங்க்யூ சார்.'' காயத்ரி எழுந்து நடந்தாள். வெளியேறிக் காருக்குள் உட்கார்ந்தாள். தொலைவில் விஸ்வநாதன் மோட்டார் பைக்கைத் திரும்பத் திரும்ப உதைத்துக் கொண்டிருந்தான். கார் கிளம்பியதும் அருகே வந்து கையசைத்தான்.

''ஹலோ ஒன் மினிட். என் மோட்டார் சைக்கிள் ஸ்டார்ட் ஆகலை. இது காந்திலால் கார்தானே. என்னை சென்ட்ரல்ல ட்ராப் பண்றேளா ப்ளீஸ்.''

காயத்ரி தலையசைத்தாள்.

காரைச் சுற்றி வந்து அவன் வலதுபுறக் கதவைத் திறந்து உட்கார்ந்து கொண்டான்.

''யாரு டிரைவர்... அட முருகனா... என்னப்பா சௌக்கியமா... ஸ்பிரிட் வாசனை வருதே. இருநூறு மூந்நூறு... பதறாத ஓட்டும்மா. ஏன் கை நடுங்குது?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே சாமி. சும்மா சாதய்க்கிறியே. இது பெட்ரோல் வாசனை. நான் சாப்டறதை என்னிக்கோ வுட்டுட்டேன்.''

''ஜூன் இருபத்திரண்டில வுட்டியா?''

''ஆமா சாமி.''

''அதாவது நேத்திக்கு.''

''ஐயோ என்னை வுட்டுடு சாமி.''

விஸ்வநாதன் வாய் விட்டுச் சிரித்தான். பின்பக்கம் சாய்ந்து கொண்டான். கண்களை மூடி 'ஈஸ்வரா' என்றான்.

காயத்ரி அவனை வியப்புடன் பார்த்தபடி இருந்தாள். எதிர்க்காற்றில் பறக்கும் இவன் சட்டைக் காலர் நுனி மாதிரி இவனுள் வெகு ஆழத்தில் ஏதோ ஒன்று பதறியபடி இருக்கிறது என்பதாய் அவளுக்குப் பட்டது.

(தொடரும்)

### வாசகர் ஜோக்ஸ்

''உங்க பெண் 'மூடி' டைப்புன்னு சொன்னீங்களே. அவளுக்கேத்த பையனைப் பார்த்திருக்கேன்.''

''எப்படிப் பார்த்திருக்கீங்க?''

''பாட்டில் டைப்புல!''

—எம். சிவானந்தம்



''உங்க பையன் கோயமுத்தூர்ல வேலை பார்க்கிறான்னீங்களே, எதாவது வச்சிருக்கானா?''

''ஆமாங்க, மூவாயிரம் ரூபாய் கடன் வச்சிருக்கான்!''

—எஸ். மாரியப்பன்




டி. எம். பி. மகாதேவன்


மொரார்ஜி

# கலைஞருக்காக கல்கி ஆசிரியர் தூது போனாரா?


பானு மகேந்திரா

மாதவி

○ போடி எஸ். என். ராஜா, மதுரை

? உள்ளூர்க் கோயில்கள் ஆயிரமிருக்க எம்.ஜி.ஆர். வெளி மாநிலக் கோயிலுக்குச் செல்வானேன்? தமிழ்த் திருத்தலங்களை அவமதிப்பானேன்?

! தெய்வத்தை எங்கு தொழுதாலும் நல்லதுதான். மனக் கோயிலில் பூஜிப்பது அனைத்திலும் சிறந்தது. ஆயினும் சிலருக்குக் குறிப்பிட்ட க்ஷேத்திரத்திலும் தெய்வத்திடமும் விசேஷப் பற்று ஏற்படுவது இயல்பு. அதைக் குறை கூறி நாம் சிறுமைப் படவேண்டாம்.

○ கோகு, காட்பாடி

? சமீபத்தில் தாங்கள் படித்து ரசித்த கட்டுரை நூல் எது?

! டி. எம். பி. மகாதேவன் எழுதிய The Sage of Kanchi என்ற ஆங்கில வரலாற்று நூலின் மறு பதிப்பு,காஞ்சிப் பெரியவரின் பீடாரோகண பவழ விழாவை யொட்டி வெளியிடப்பட்டுள்ளது. (விலாசம்: Sri Kanchi Kamakoti Sankara Mandir, Secundrabad-500 026 விலை ரூ. 12.50) பெரியவரின் வாழ்க்கையில் சுவையான சம்பவங்கள் உயரிய அழகிய ஆங்கில நடையிலே வர்ணிக்கப்பட்டுள்ளன. காஞ்சி முனிவரின் அருட் தன்மையை வடிக்கும் எழுத்தோவியம். தவிர சுவாமிகளுடைய அருள்வாக்கும் இடம் பெற்றுள்ளது. தவக்கோல மேலட்டை. உள்ளே இரு குருமார்களது வண்ணப் படங்கள். இந்நூல் விற்பனையால் கிடைக்கக்கூடிய லாபம் பெரியவாளின் ஆக்ஞைப்படி பணியாற்ற இருக்கும் டிரஸ்டுக்குச் செல்கிறது என்பது நூலைப் படிக்கும்போது ஏற்படும் திருப்திக்கு இணையான இன்னொரு மன நிறைவு.

○ ஆர். கே. லிங்கேசன், மேலக்கிருஷ்ணன் புதூர்

? சாகித்திய அகாதமி பரிசு கலைஞருக்குக் கிடைக்கப் போவதாகவும் அதற்குக் கல்கி ஆசிரியர் தூது போவதாகவும் ஒரு பத்திரிகை எழுதியிருக்கிறதே?

! ஒரே வாக்கியத்தில் நான்கு பொய்களை உள்ளடக்கியது மாபெரும் சாதனைதான்.

○ என். கணேசன், பீளூட்பிபுரம், திருநெல்வேலி

? உங்களைப் பெருமைப்பட வைத்த நபர் யார்?

! நண்பர் எஸ்.கிருஷ்ணசாமிக்கு அவருடைய டாக்குமெண்டரி திரைப்படங்கள் தயாரிப்பு ஆற்றலை மெச்சி அமெரிக்காவிலுள்ள கொலம்பியா பசிபிக் பல்கலைக் கழகம் இவ்வாண்டு டாக்டர் பட்டம் வழங்கிக் கௌரவித்திருக்கிறது. INDUS VALLEY TO INDRA GANDHI என்ற அவரது மாபெரும் டாக்குமெண்டரி இந்திய சரித்திரத்தையும் சமுதாய மாற்றங்களையும் படம் பிடித்துக் காட்டுவதால் அமெரிக்காவில் அளப்பரிய புகழ் பெற்று டீ. வி. உரிமைகள் பெறப்பட்டுள்ளன. அனேகமாக எல்லாப் பல்கலைக் கழகங்களும் அத்திரைப் படத்தின் ஒரு பிரதியை வாங்கி வைத்துள்ளன. திரைப் படத்தையும் டீ. வி.யையும் கல்விப் பணிக்கு போரடிக்காதமுறையில் எப்படித் திறம்படப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதை கிருஷ்ணசாமியிடம் கற்றுக் கொள்ள வேண்டும். இவரைப் போன்றவர்களைப் பயன் படுத்திக் கொள்ள நமது அரசுக்குத்தான் வக்கில்லை; அமெரிக்கா முந்திக் கொள்கிறது. நாம் நமது டீ. வி. நிகழ்ச்சிகளைப் பார்த்து எரிச்சல் பட்டுக் கொண்டிருக்கிறோம்.

○ ஜி. குமரேசன், பாண்டமங்கலம்

? மொரார்ஜி தேசாய் பற்றி நம்ப முடியாத அவதூறுகளை அமெரிக்கப் பத்திரிகையாளர்

# நீங்கள் கேட்டவை

## தராசு

ஹெர்ஷ் தமது புத்தகத்தில் எழுதியிருப்பது பற்றி?

! வாட்டர்கேட் ஊழல் அம்பலமானதைத் தொடர்ந்து மேல் நாட்டுப் பத்திரிகைகளும் பத்திரிகையாளர்களும் புதிது புதிதாக எதையாவது இருட்டிலிருந்து வெளிச்சத்துக்குக் கொண்டு வந்து பெரும் புகழ் பெறுவதில் குறியாக இருக்கிறார்கள். இந்த ஆர்வத் துடிப்பு காரணமாக எழுதுவதைச் சரிபார்க்காமல் ஆதாரங்களை நுணுகி ஆராயாமல் பரபரப்புடன் செயல்பட்டுத் தவறுகள் இழைத்து விடுகிறார்கள். ஹிட்லரின் டயரியும் ஹெர்ஷின் அபத்தமான குற்றச்சாட்டும் இந்த வகையைச் சேர்ந்தவையே.

○ விமலா வித்யா, நாமக்கல்

? தினமணியையும் தினமணி கதிரையும் இணைந்ததைப் பற்றி என்ன சொல்லப் போகிறீர்கள்?

! கதிரைத் தினமணியுடன் இணைப்பது டல் தினமணியின் விற்பனை அதிகரிக்க தினமணி கதிரில் ஏற்பட்டு வந்த நஷ்டத்தை ஈடுகட்டிவிடலாம் என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள். கணக்குப் பலித்தால் மகிழ்ச்சியே. ஆனால் தினமணி கதிரும் சரி, தினமலர் வாரப் பதிப்பும் சரி இலவச இணைப்புக்கள் என்று அறிவிக்கப்படுவது மோசடியே. அந்த நாளைய நாளிதழின் விலை கணிசமாகக் கூடுகிறது என்பதை மறைக்கவோ மறுக்கவோ இயலாது.

○ எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம் ★

? எம். ஜி. ஆர். நுழைவு வரியைக் கொண்டு வந்தபோது எதிர்த்தீர்கள், சரி. இப்போது நுழைவு வரியை ரத்துச் செய்து விட்டாரே பாராட்டுவீர்களா?

! மனம் திறந்து பாராட்ட முடியாமல் தடுப்பது அவருடைய வழவழா பேச்சுத்தான். ''வியாபாரிகள், பொதுமக்கள், பிரதமர் ஆகிய அனைவரது விருப்பத்துக்கும்வேண்டுகோளுக்கும் இணங்க நுழைவு வரியைத் தமிழக அரசு வாபஸ் பெறுகிறது'' என்று பளிச்சென்று சொல்லியிருந்தால் அவரை மனம் விட்டுப் பாராட்டியிருக்கலாம். ''நுழைவு வரியை நிறுத்தி வைக்கிறேன்; மாற்று யோசனைகளை வியாபாரிகளே கூறட்டும்'' என்றெல்லாம் பேசுவது நகைப்புக்கிடமாகி விடுகிறது.



எஸ். கிருஷ்ணசாமி

ஆஸ்திக சமாஜம் ராம மந்திர்

○ கே. எஸ். ராமகிருஷ்ணன், கரூர்

? அழகும் திறமையும் இருந்தும் மாதவி தமிழ்ப் பட உலகில் புகழ் பெற முடியாதது ஏன்?

! அதிர்ஷ்டம் இல்லாததுதான் காரணம் என்று நான் சொன்னால் உங்களுக்குச் சற்று ஆறுதலாக இருக்கும். ஆனால் வேறு பல வாசகர்கள் அதிர்ஷ்டம் இருந்ததால் தான் இந்த அளவுக்காவது படங்களில் நடித்தார் என்று வாதிடக் கூடும்!

○ எம். முத்துநாயகம் விக்கிரமசிங்கபுரம்

? பெரும்பாலான நமது திரைப் படங்கள் ஒளிப் பதிவு செய்யப்பட்ட ரேடியோ நாடகங்களே என்று பாலு மகேந்திரா கூறியிருக்கிறாரே?

! அது எவ்வளவோ தேவலாம். பெரும்பாலான நமது டி.வி. நாடகங்களோ ஒளிப் பதிவு செய்யப்பட்ட பள்ளிக்கூட நாடகங்களாக இருக்கின்றன!

○ டி. ஆர். சந்திரசேகரன், சென்னை

? இந்நாட்டின் உத்தமர்கள் யார் யார்?

! ஒரே லஞ்ச ஊழலும் பொய்யும் பித்தலாட்டமும் மலிந்து விட்ட நிலையில் இறை உணர்வும் பயபக்தியும் நல்லொழுக்கமும் ஊட்டும் செயல்களைச் செய்து வருபவர் அனைவரும் உத்தமர்கள். பம்பாயில் ஆஸ்திக சமாஜ அன்பர்கள் மாட்டுங்காவில் தங்களது ஸ்ரீராம மந்திருக்கு 67 அடி உயரமுள்ள ராஜ கோபுரத்தைக் கட்டி முடிப்பதில் வெற்றி கண்டு அண்மையில் கும்பாபிஷேகமும் நடத்தினார்கள். இதனை மாட்டுங்கா ஆஸ்திக சமாஜத்தின் அறுபதாண்டுப் பணியின் சிகரம் எனலாம். கோபுர அமைப்பில் சிறப்புப் பணியாற்றியவர் ஸ்தபதி எம். ஜி. நாகராஜன். சாஸ்திர விதிகளின்படி நடந்த கும்பாபிஷேகத்தையொட்டி நாலு நாள் திருவிழா நமது பல்வேறு கலைகளைச் சிறப்பிக்கும் கலை விழாவாக நடந்தேறியது.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

எஸ். எஸ். மணி
சபாபதி கோயில் தெரு
சாலை, திருவனந்தபுரம்

# டில்லியில் 

கரோல்பாக்கிற்கு ஒட்டியுள்ள ராஜேந்திரா பிளேஸ் என்ற பகுதியில் பல மாடிக் கட்டிடங்கள் பல இருக்கின்றன. திங்கட்கிழமைக் காலை 11.40க்கு கோபால டவர் எனும் 14 மாடிக் கட்டிடத்தில் நெருப்புப் பிடித்துக் கொண்டது.

பேஸ்மெண்டில் ஏதோ வெல்டிங் நடந்து கொண்டிருந்தது. அதிலிருந்து வந்த தீப்பொறி ஏ. சி. குழாய்களைப் பிடித்துக்கொண்டு மளமளவென்று மேல் மாடிகளுக்கு ஏறிவிட்டது.

பல அலுவலகங்கள் இயங்கும் இக்கட்டிடத்தின் ஏழு மாடிகளும் பேஸ்மெண்டும் நாசமாகி விட்டன.

மேல் மாடியில் உள்ளவர்கள் கீழே வர முடியவில்லை. ஆகவே மொட்டை மாடிக்கு ஏறிவிட்டார்கள். சுமார் 300 பேர் அங்கு அகப்பட்டுக் கொண்டார்கள்.

கீழே தீயின் ஜ்வாலை. சூட்டினாலும் பயத்தினாலும் தொண்டை வரண்டு விட்டது. தண்ணீர் வேண்டும் என்று காகிதத்தில் எழுதிக் கல்லில் சுற்றிக் கீழே போட்டார்கள்.

இதற்குள் டில்லி லெப்டினன்ட் கவர்னர் ஜக்மோகன், ராஜீவ் காந்தி ஆகியோர் அங்கு வந்து விட்டனர்.

ராணுவ ஹெலிகாப்டர்களின் உதவி கோரப்பட்டது. ஒன்பது ஹெலிகாப்டர்கள் நூல் ஏணிகளுடனும், வாட்டர் பாட்டில்களுடனும் வந்தன. முதலில் தண்ணீர் புட்டிகளைப் போட்டன. நூல் ஏணியை இறக்கி இரண்டு மூன்று பேரை மேலே தூக்கின. ஆனால் ஹெலிகாப்டரின் பிளேடுகளினால் ஏற்பட்ட பலத்த காற்று, தீயை அதிகப்படுத்தியது. (இதனால் கீழ்த் தளம் ஒன்றில் தீ பரவ ஆரம்பித்து விட்டது.) ஆகவே ஹெலிகாப்டர்கள் வாபஸ் பெறப்பட்டன. (ஹெலிகாப்டர் மூலம் காப்பாற்றப்பட்டவர்களில் ஒருவர் ஜக்மோகனின் மாப்பிள்ளை!)

மேல் மாடிகளில் இருப்பவர்களை எப்படிக் காப்பாற்றுவது? அவ்வளவு உயரத்திற்கு எட்டக்கூடிய ஏணி கிடையாது.

தீப்பிடித்த கோபால டவருக்கு அடுத்து இருந்தது பிரகதி டவர். அந்த டவரின் மொட்டை மாடியிலிருந்து கோபால டவருக்கு கயிற்றுப் பாலம் அமைத்தார்கள். ஆனால் அதில் செல்ல யாருக்கும் துணிவு வரவில்லை. பயத்தினால் கால் தடுக்கி அல்லது வழுக்கி விழுந்தால் 14 மாடி உயரத்திலிருந்து விழும் நிலைமை! தீயின் உக்கிரம் அதிகரிக்கவே பயம் போய்த் துணிவு வந்தது. சுமார் 250 பேர் இந்தப் பாலத்தின் வழியாக இடுப்பில் கயிற்றைப் பாதுகாப்புக்காகக் கட்டிக் கொண்டு கடந்தார்கள்.

மூன்று மணி வாக்கில் தீயின் ஜ்வாலை கயிற்றுப் பாலத்தையும் எரித்து விட்டது. மற்றொரு பாலம் போடப்பட்டது.

ஒரு சிலர் பெரிய கம்பளத்தைக் கொண்டு வந்து கட்டடத்தின் அருகில் பிடித்துக் கொண்டே கீழ் மாடியில் உள்ளவர்களை அதில் குதிக்கச் சொன்னார்கள். ஆனால் யாருக்கும் துணிவு வரவில்லை. இதற்கு முன்பு ஒருவர் மூன்றாம் மாடியிலிருந்து குதித்து விட்டார். அதிர்ஷ்ட வசமாக அவருக்கு அடி எதுவும் படவில்லை.

டில்லி நெருப்பணைக்கும் சர்வீஸைச் சேர்ந்த கிஷோரி சிங் என்ற ஆபீசர் ஒருவர் தான் இந்த விபத்தில் இறந்து போனார். அவர் 11வது மாடியில் ஏணி மூலம் இறங்கியவர் புகையில் சிக்கி மூச்சுத் திணறி இறந்து போனார். அவரது உடல் ஏழாவது மாடியில் கண்டு பிடிக்கப்பட்டது.

இவருக்குச் சமீபத்தில்தான் வீர விருது வழங்கப்பட்டது. கிஷோரி சிங்கின் குடும்பத்திற்கு ஐம்பதாயிரம் ரூபாய் கொடுக்க அரசு அறிவித்துள்ளது. அவரது முழுச் சம்பளமும் பென்ஷனாக அளிக்கவும் உத்தரவிடப்பட்டுள்ளது.

கோபால டவரின் உரிமையாளர் ஆர். கே. குப்தா இப்போது பிரான்ஸில் இருக்கிறார். கட்டிடம் இரண்டரைக் கோடிக்கு இன்ஷூர் செய்யப்பட்டது. அஜாக்கிரதையினால் ஏற்பட்ட தீவிபத்து என்றால் இன்ஷூரன்ஸ் தொகை தரப்பட மாட்டாது. (தற்போது தீவிபத்தைப் பற்றி விசாரணை நடந்துகொண்டிருக்கிறது.)

கட்டிடம் பலத்த நாசம் அடைந்து விட்டதால், இதை இடிக்க வேண்டியிருக்கும் என்று கருதுகிறார்கள். அது தானாகவே விழுந்தால் ஏற்படும் ஆபத்தைத் தவிர்க்க அந்தப் பகுதியைச் சுற்றி போலீஸ் காவல் போடப்பட்டிருக்கிறது. பிரகதி டவரும் மூடப்பட்டு இருக்கிறது.

இந்தியாவிலேயே இதுதான் மிகப் பெரிய தீவிபத்து என்கிறார்கள். (இப்போது டில்லியில் அர்ச்சனாவில் 'டவரிங் இன் ஃபெர்னோ' படம் நடந்து கொண்டிருக்கிறது.)

புதன் கிழமையன்று டில்லியில் புயல்காற்று வீசியது. அதன் காரணமாக கோபால டவரின் 11, 12, 13வது மாடிகளின் பக்கச் சுவர்கள் கீழே விழுந்தன.

கவனக்குறைவாக நடந்து கொண்டதாகக் கோபால டவரின் கேர்-டேக்கரையும் மற்ற இருவரையும் கைது செய்து இருக்கிறார்கள்.

-திரட்டியது: ''கமல்''

# கிட்டப்பாவுக்கு சில கேள்விகள்




**சென்ற இதழில் கலைஞரைக் கேள்வி கேட்ட கிட்டப்பாவின் மீது சில கேள்விக் கணைகளைத் தொடுக்கிறார் சென்னை மாவட்ட தி.மு.க. செயலாளர் டி.ஆர். பாலு அவர்கள்.**

1. சுயமரியாதை இயக்க காலந்தொட்டு பெரியாரின் தொண்டராகவும், அண்ணாவின் தம்பியாகவும், கலைஞரைத் தலைவராகவும் ஏற்றுக்கொண்ட தங்களுக்கு எம். ஜி. ஆர். அவர்களின் மத — சமுதாயக் கொள்கைகள் ஏற்புடையவைதானா?

2. கட்சித் தேர்தலில் ஏற்படும் வெற்றி தோல்வியே ஒருவருடைய கொள்கையையே தலைகீழாக மாற்றி அமைக்கக் கூடும் என்று உறுதியாக நம்புகிறீர்களா?

3. தி. மு. க. அமைப்புகளுக்கான தேர்தலின்போது ஒவ்வொரு மாவட்டத்துக்கும் தமது மகனை அனுப்பி இன்னார்தான் செயலாளராக வரவேண்டும் என்று கலைஞர் கட்டளை அனுப்பியதாகச் சொல்கிறீர்களே—எந்தெந்த மாவட்டத்துக்குத் தமது மகனை அனுப்பினார் என்பதற்கு ஆதாரம் உண்டா?

4. எம். ஜி. ஆர். அரசின் நல்ல பல திட்டங்களையும் கலைஞர் எதிர்ப்பதாகச் சொல்கிறீர்களே, எந்த நல்ல திட்டத்தைக் கலைஞர் எதிர்த்தார்?

5. சிலைத்திருட்டு வழக்கில் தங்களை அரசாங்கம் உட்படுத்தியதுதான் தங்களுடைய கட்சித் தாவலுக்குக் காரணம் என்று சொல்கிறார்களே?

6. கழகத்திலிருந்து தாங்கள் பணம் பெற்று வந்தும், மேலும் மேலும் நீங்கள் கேட்டபோதெல்லாம் கழகத்திலிருந்து பணம் கொடுக்காத காரணமும் நீங்கள் கட்சி தாவியதற்கு ஒரு காரணம் அல்லவா?

7. அ. தி. மு. க. ஒரு நடிகையின் ஆதிக்கத்தில் இயங்கும் அமைப்பு என்று நீங்கள் அடிக்கடி சொல்வீர்கள் — அந்தக் கருத்தை இப்போது மாற்றிக் கொண்டீர்களா?

8. கலைஞர் அவர்கள் ஏதாவது போராட்டத்தை அறிவித்தால், மகிழ்ச்சியுடன் ஓடி வந்து கலந்துகொள்பவன் தி. மு. க. தொண்டன். இது உங்களுக்கு நன்றாகத் தெரியும். போராட்டங்களையும் ஆழ்ந்த யோசனைகளுக்குப் பிறகே கலைஞர் அறிவிக்கிறார். அப்படியிருக்கப்போராட்டங்களைப் பார்த்துச் சலித்துப் போகும் ஒரு தி. மு. க. தொண்டனை உங்களால் அடையாளம் காட்ட முடியுமா?

தொகுப்பு: நமது நிருபர்

---

**போலீஸ் ஜோக்ஸ்**

போலீஸ்: உங்க பெயரைச் சொன்னீங் கன்னு ஆக்ஸிடெண்ட்டுல அடிபட்டு ஆஸ்பத்திரியில இருக்கிறதா உங்க வீட்டுல சொல்லிடுவோம்.

பேஷண்ட்: என் பேரு எங்க வீட்டுல எல்லாருக்கும் தெரியுமே!

—ஏ. வி. தேவன்





"புருஷன் பெண்ஜாதி சண்டைக்குப் போலீஸ் வந்துட்டுதா?"

"ஆமாம். ஜாதிச் சண்டைன்னு சேதி பரவிட்டதுதான் காரணம்!"

—இளை அ. கதிர்வேல்

# அலை! சிலுக்கு அலை!



சிறப்பிதழ் சிலுக்கு
சிரிப்புத்துணுக்கும் சிலுக்கு
சகலமும் சிலுக்கு
மிகையில்லை.
செய்திப்
புகையில்லை.
கையிலெடுக்கும்
சஞ்சிகையாவும்
ஏந்திவருவது
சிலுக்கின்
நடனக் கோலம்
உடையோ
அலங்கோலம்.

அசோகன் காலம்
அக்பர் காலம்
அப்புறம்
ஆங்கிலேயர்
ஆட்சிக் காலம்.
எல்லாம்
சரித்திரப் பாடம்
வெள்ளித் திரைக்கும்
சரித்திரம்
உண்டு

செல்லப்பா சின்னப்பா
பாகவதர்
என். எஸ். கே.
கண்ணாம்பா
எத்தனையோ பேர்
வந்தார்கள்
வாழ்ந்தார்கள்
புகழில்
மிதந்தார்கள்
போனார்கள்.
அவர்கள் ஆவிகள்
இன்று
வெட்கப்படலாம்
வியப்படையலாம்.
அந்த சினிமா
வம்சத்தில் வந்த
தனி நபர்
தாங்கும்
விளம்பரச்
சுமையைப் பார்த்து.

திரை உலகத்
தாரகை
தயாரிப்பாளர்களின்
அதிர்ஷ்ட
தாயத்து
கமலோ சிவாஜியோ
ஆல்ரைட்!
ராதாவோ சரிதாவோ
பரவாயில்லை!
ஆனால்
விநியோகஸ்தர்கள்
வேண்டிக் கேட்பது
சிலுக்கிற்கு
ஒரு ரோல்
இல்லையோ
அவர்கள் பணம்
'ரோ'லாகாது.
விளைவு?

பாவம்
கதாசிரியர்கள்
கதை கட்டவேண்டிய
இளைமாக்ஸ் காட்சியை
கதையாய் மறந்து
வளைந்து நெளிய
சிலுக்கிற்கு இரண்டு
டான்ஸ் சீக்வென்ஸ்
வைத்தாக வேண்டும்
அப்புறம்
கதையே
ஒற்றைக்காலில்
டான்ஸ் ஆடலாம்
கவலை இல்லை!

அப்பன் ஹிரண்யன்
அன்று கேட்டான்
'எங்கடா உன் நாராயணன்?'
என்று.
'தூணிலுமிருப்பான்
துரும்பிலுமிருப்பான்
எங்கும் நிறைந்தவன்
என் நாராயணன்'
என்றான் மகன்
பிரகலாதன்.

இன்றைய பிரகலாதன்
கையை விரிப்பான்
சிரிப்பான்.
'நாராயணனா?
ஐ டோன்ட்நோ.
லுக் ஹியர் ஃபாதர்!
எனக்குத் தெரிவது
சிலுக்கு மாத்திரம்.
அவள்
திரையிலிருப்பாள்
தெருச் சுவரொட்டியில்
இருப்பாள்
பத்திரிகை அட்டைகளில்
பரிமளிப்பாள்
பரபரக்கும் செய்திகளில்
படர்ந்திருப்பாள்.
பார்க்குமிடமெல்லாம்
நீக்கமற நிறைகின்ற
பரிபூரணம் பெற்ற
பாவையவள் சில்க்'
என்பான்.
நெளிவான். குழைவான்.

இளைஞர் கனவில்
சிலுக்காம்.
இடைவேளை
தாண்டியவருக்கும்
இரக்கமாம்!
திரையில் அவர்
திகட்டும்வரை
ஆடிக் குதித்து
அலுப்பதில்
அத்தனை பேருக்கும்
அக்கறையாம்!
'அடேயப்பா
என்ன குலுக்கு!'
என்று
வியந்து மகிழ்ந்து
மயங்கும் மாந்தர்
இருக்கும்வரை
சிலுக்கின் காட்டில்
ரோண மழை
உண்டு
பண மழை!

ஹூம்!
காலம் மாறலாம்
ஆனாலும்
யார் காட்டிலாவது
மழையைக் கொண்டு
கொட்டுவார்களே
இந்த
மாயையில் சிக்கிய
மனிதர்கள்.
முன்பு ஆடினவர்களும்
உண்டு
இனி
ஆடப்போவாரும்
உண்டு

இடையே
இது ஒரு காலம்
சிலுக்கிற்கு
துணிப் பஞ்ச
காலம்.
புராணப் பாஞ்சாலிக்கு
அனுதாபப்பட்டவர்கள்
ஏனோ
சிலுக்கைப் பார்த்து
அகமகிழ்கிறார்கள்!

-கோமதி ஸ்வாமிநாதன்
வண்ணக் கார்ட்டூன்: நம்பி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani          Editor: K. Rajendran

